இப்பொழுது வெற்றிகரமாக நடைபெறுகிறது

# ஜூபிடரின்

# வேலைக்காரி

| | | |
|---|---|---|
| பெங்களூர் | .... | ஸூபர் டாக்கீஸ் |
| ,, | .... | ஸ்ரீ டாக்கீஸ் |
| திருச்சி | .... | ஸ்டார் டாக்கீஸ் |
| கோயமுத்தூர் | .... | கர்னாடிக் டாக்கீஸ் |
| சேலம் | .... | ஓரியண்டல் டாக்கீஸ் |
| கும்பகோணம் | .... | ராஜா டாக்கீஸ் |
| மாயவரம் | .... | சுந்தரம் டாக்கீஸ் |
| காரைக்குடி | .... | நடராஜா டாக்கீஸ் |
| வேலூர் | ... | ஸாயிபாபா டாக்கீஸ் |
| திருப்பாப்புலியூர் | .... | முத்தையா டாக்கீஸ் |
| சிதம்பரம் | .... | கிருஷ்ணா டாக்கீஸ் |
| பாண்டிச்சேரி | .... | ரத்னா டாக்கீஸ் |
| திருவண்ணாமலை | .... | நீலா டாக்கீஸ் |
| நாகர்கோவில் | .... | அழகப்பா டாக்கீஸ் |
| கொல்லம் | .... | லக்ஷ்மி டாக்கீஸ் |
| திருச்சூர் | .... | ஜாஸ் தியேட்டர் |
| செங்கோட்டை | .... | பத்மநாபா டாக்கீஸ் |
| காரைக்கால் | .... | ஸ்ரீதேவி டாக்கீஸ் |

விரைவில் வருகிறது

| | | |
|---|---|---|
| மதுரை | .... | சென்டிரல் |

திருநெல்வேலி, தஞ்சாவூர், விருதுநகர், புதுக்கோட்டை, திருவாரூர்

திருவனந்தபுரம் & மதராஸ்

★

டைரக்ஷன் : ஏ. எஸ். ஏ. சாமி

ஸ்டுடியோ : சென்ட்ரல்

# ரமணி

# பேபி கிரைப்

குழந்தைகளுக்கேற்படும் கோளாறுகளுக்கு






குழந்தை சீறி சிணுங்கி அழும் விஷயம் தெரிந்த தாயார் உடனே ரமணி "பேபி கிரைப்"பைக் குழந்தைக்குக் கொடுப்பாள். உடனே அது குணமளிக்கும். மலபந்தம், கடுப்பு, வயிற்றுப்போக்கு, வயிறு உப்புதல் போன்ற வயிற்றுக் கோளாறுகளுக்கு கைகண்ட ஔஷதம்.

தயாரிப்பாளர்கள் :

ஸௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி, மதுரை

ஏஜண்டுகள் : மெஸர்ஸ். சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ் ஏஜென்ஸீஸ், பெஜவாடா; செகந்திராபாத் & பேர்ஹாம்பூர் : ஸ்ரீ கிர்ஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி, மெஸர்ஸ். ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், மதராஸ்

# ப்ரூக்லாக்ஸ்

## சாக்லெட் மலமிளக்கி




ப்ருக்லாக்ஸ், மலச்சிக்கல் உண்டாகும் குடலினுள் மட்டுமே வேலைசெய்து ஒரு தொந்தரவும் இன்றி மலச்சிக்கலை அடியோடு அகற்றுகிறது. ஆதலால் ஜீரண சக்தியை தடை செய்வதில்லை.

2, 8, 24 மாத்திரைகளடங்கிய வாட்டமான சைஸ்களில் கிடைக்கும். பெரிய சைஸ் வாங்குவது மிகவும் சிக்கனமானது.

**ஒரே இரவில் மலச் சிக்கலை அறவே அகற்றுகிறது.**

WL-3-A

## கேசரியின்
## மூன்று பிரசித்த மருந்துகள்

●

# லோத்ரா

**கர்ப்பாசய ரோக நிவாரணி**

சங்காதோஷம், கீல் வாயு தூக்கமின்மை, அஜீரணம், மலச்சிக்கல், இருமல், காசம், தலைவலி, முதுகுவலி முதலியவற்றைக் குணப்படுத்தும்.

●

# அம்ருதா

**ரத்த சுத்தி டானிக்**

ரத்த சோகை, அஜீரணம், மலச் சிக்கல், மந்தமான மூளை, பலவீனம், படபடப்பு, ஞாபகமின்மை, தெளிவற்ற கண் பார்வை, தலை சுற்றல், சரும ரோகங்கள் முதலியவற்றைக் குணப்படுத்தும்.

●

# அர்க்கா

**சிறந்த ஜுர நிவாரணி**

இன்புளுயன்ஸா, டைபாய்ட், மலேரியா, முதலான ஜுரங்கள் குணமாகும். சுரல் குலைக் கட்டிகளும் குணமாகும்.

●

**விவரங்களுக்கு எழுதுங்கள்**

## கேசரி குடீரம் லிட்.

**ராயப்பேட்டை, மதராஸ் - 14**

---

## குழந்தைகளின் சுரல் குலைக் கட்டிகளுக்கு இன்றியமையாத மருந்து!



குழந்தைகளின் சுரல் குலைக் கட்டிகளை குணப்படுத்தும் ஜம்பியின் லிவர்க்யூர் வைத்திய சாஸ்திரத்திற்கே அவசியமானதும் பெருமை அளிக்கக் கூடியதாகவும் இருக்கிறது.

இந்த அற்புத நிவாரணியால், முற்றிப் போய் கைவிடப்பட்ட சுரல் குலைக் கட்டி வியாதிகளும் ஆச்சரியகரமான முறையில் குணப்படுத்தப் பட்டிருக்கிறது என்று இந்தியாவில் உள்ள பிரக்யாதி பெற்ற பல டாக்டர்களால் பாராட்டப் பட்டுள்ளது.



ஜம்பியின்
# லிவர்க்யூர்

ஜம்பி வெங்கடரமணப்பா அன் ஸன்ஸ்
[illegible]

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 8 இதழ் 32 | மார்ச் 6 | சர்வதாரி ௵ மாசி 23


| | | |
|---|---|---|
| என்ன சேதி ? | ... | ... 9 |
| நினைத்ததும் நடந்ததும் | சாஸ்திரி | ... 10 |
| மடாலய பரிபாலன மசோதா | ... | ... 12 |
| வரி வசூல் விஷயம் | ... | ... 15 |
| வரவு செலவுத் திட்டங்கள் | ... | ... 17 |
| இதோ ஒரு சிம்மம் ! | ... | ... 19 |
| சர்தார் யாத்திரை ! | ... | ... 20 |
| சில்லறை விஷயங்கள் | எம். எல். எஸ். | ... 21 |
| வியாதி கடுமை! | ரகு | ... 32 |
| அலை ஓசை | கல்கி | ... 22 |
| வட்ட மேஜை | ... | ... 31 |
| அசோகர் அளித்த பரிசு ! | ரஜனி | ... 35 |
| மாந்தருக்குள் ஒரு தெய்வம் | ரா. கி. | ... 37 |
| புரியவில்லை ! | சாமா | ... 39 |
| காலக்ஷேபம் | ... | ... 42 |
| பொய் சொல்லாதே ! (பாப்பா மலர்) | மாஜு | ... 44 |
| மலைக் கழுகு | துஷ்யந்தன் | ... 49 |
| கம்பர் தரும் காட்சி | டி. கே. சி. | ... 51 |
| சித்த புருஷர் | கினஜா | ... 53 |
| சுதந்திர மாளிகை | ஜெயமணி | ... 58 |




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 32

# என்ன சேதி?

## வேண்டாம், வேண்டாம்!

ஓயாமல் ஒழியாமல் இந்திய மகா ஜனங்களின் செவிகளைத் துளைத்து வந்த 'ஸ்டிரைக் செய்யுங்கள்', 'ஸ்டிரைக் செய்யுங்கள்' என்ற கோஷம் இனி மறைந்து விடலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டு வருகிறது. அதற்குப் பதிலாக 'ஸ்டிரைக் வேண்டாம்' என்ற கோஷம் இந்தியா வெங்கும் ஒலிக்க ஆரம்பித்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

சென்ற மாதத்தில் கொடுத்திருந்த ஸ்டிரைக் நோட்டீஸை ரத்து செய்துவிடுவதென்று அகில இந்தியத் தந்தி தபால் தொழிலாளர் சங்க மகாசபை முடிவு செய்திருக்கிறது. தென்னிந்திய ரயில்வே தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்தால், அதனால் ஏற்படும் நிலைமையைச் சமாளிக்கத் தாங்கள் சர்க்காருக்கு உதவி புரிவதாக எம். எஸ். எம். ரயில்வேத் தொழிலாளர் உறுதி கூறியிருக்கிறார்கள். தென்னிந்திய ரயில்வே மாஜி தொழிலாளர் சபையினர் வேலை நிறுத்தத்தைச் சமாளிக்கும் விஷயத்தில் ரயில்வே அதிகாரிகளுடன் முற்றிலும் ஒத்துழைப்பதாய் அறிவித்திருக்கிறார்கள்.

பம்பாயில் ஒரு வாரமாக வேலை நிறுத்தம் செய்த விமானிகளும் வேலை நிறுத்தம் கூடாது என்று முடிவு செய்தனர். இதெல்லாவற்றிற்கும் சிகரம் போன்ற ஒரு நல்ல காரியத்தைச் சென்னை சர்க்கார் பஸ் தொழிலாளர் சங்கத்தினர் செய்திருக்கிறார்கள். அதாவது இனி எக்காலத்திலும் ஸ்டிரைக் என்ற பேச்சையே எடுப்பதில்லை என்றும், எந்தத் தகராறுகளையும் சமரசமாகவே தீர்த்துக் கொள்வது என்றும் முடிவு செய்திருக்கிறார்கள்!

இணையில்லாத சுதந்திரத்தை இந்தியா அடையும்படி செய்த அரும்பெரும் தலைவர்களுக்கு, தொழிலாளரின் குறைகளைத் தீர்ப்பது பெரிய காரியமல்ல. எனவே, அவர்களிடம் பூரண நம்பிக்கை வைக்கும் தொழிலாளரும் ஜனங்களும் எக்காலத்திலும் வருந்தும்படி நேராது என்பது உறுதி.

## அக்கிரம யுத்தம்

சென்ற சில மாதங்களாகப் பர்மாவில் நடந்து வரும் உள்நாட்டு யுத்தத்தில் முப்பதினாயிரம் பேர் பலியாகிவிட்டனர் என்று பர்மா பிரதம மந்திரி தாகின் நூ பதறுகிறார். "சுதந்திர பர்மாவின் விதி முடிந்து விட்டது என்று உலகம் முழுவதும் கருதுகிறது. உள்நாட்டுப் போர் காரணமாக பர்மா சகிக்க முடியாத வறுமையில் ஆழ்ந்திருக்கிறது. தற்போதைய நிச்சயமற்ற நிலைமையில் வெளியிலிருந்தும் கடன் வாங்க முடியவில்லை" என்று அவர் கதறுகிறார்.

இந்தோனேஷியாவின் துன்பத்தைத் தீர்க்கும் விஷயமாக இந்திய சர்க்கார் சிரத்தை எடுத்துக் கொண்டதுபோல, ஆசிய நாடுகளில் ஒன்றும் இந்தியாவை அடுத்துள்ளதுமான பர்மாவின் கஷ்டத்தைத் தீர்ப்பதிலும் இந்திய சர்க்கார் சிரத்தை கொண்டு, புது டில்லியில் சம்பந்தப்பட்ட தேசங்களின் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு மகாநாட்டைக் கூட்டி, பர்மாவில் அமைதி ஏற்படுவதற்கான பிரயத்தனங்களைச் செய்து வருகிறார்கள். சுதந்திரம் பெற்றதும் பெருந்தன்மையாக பர்மா சர்க்கார் அங்குள்ள இந்தியர்களின் சொத்துக்களைப் பறிமுதல் செய்யச் சட்டம் செய்தனர். சர்க்கார் உத்தியோகங்களிலுள்ள ஆயிரக்கணக்கான இந்தியர்களை வேலையை விட்டு நீக்கினர். அப்படியிருந்தும் பர்மா பிரமாதமான கஷ்டத்துக்கு ஆளாகியிருக்கும் இச்சமயத்தில், அது எக்கேடு கெட்டுப் போகட்டும் என்று இராமல் இந்திய சர்க்கார் அதற்கு உதவி புரிய முன் வந்திருப்பது இந்தியாவின் பெருமையை மேலும் உயர்த்தியிருக்கிறது.

# நினைத்ததும்




யானையைத் தம் காலில் விழுந்து பணியச்
செய்ய வேண்டுமென்று தோழர் வேலு நிருத்தம்
ஆசைப்பட்டார்.

# நடந்ததும்

பூ பூ என்று ஊதி
யானையைக் காற்றிலே
பறக்கச் செய்யலாம் என்று
தலைவர் வகுப்புவாதம்
மனோராஜ்யம் செய்தார்.

அவர்களுடைய முயற்சியின் பலன்
இப்படி ஆயிற்று!

இந்திய சர்க்கார்

# மடாலய பரிபாலன மசோதா

தமிழ்நாட்டில் நம் முன்னோர்கள் சாதித்திருக்கும் சில காரியங்களை நினைத்தால் ஒரே பிரமிப்பா யிருக்கிறது.

எத்தனை எத்தனை பிரம்மாண்டமான ஆலயங்களைக் கட்டினார்கள்? அந்த ஆலயங்களின் விஸ்தாரம் என்ன? பிராகாரங்களின் விசாலம் என்ன? மதிள் சுவர்களின் உயரம் என்ன? ஆயிரக்கால் மண்டபங்கள் என்ன? அந்த மண்டபங்களைத் தாங்கி யுள்ள ஒவ்வொரு தூணின் கம்பீரம் என்ன? தெய்வ விக்கிரகங்களின் அற்புதமான அமைப்பு என்ன? ஆலய கோபுரங்களின் உன்னதத்தைக் குறித்து என்னத்தைச் சொல்வது? மதுரை, இராமேசுவரம், காஞ்சீபுரம், சிதம்பரம், ஸ்ரீரங்கம், திருவானைக்காவல் முதலிய ஸ்தலங்களில் உள்ள கோவில்களை எண்ணிப் பாருங்கள்!

அந்தமாதிரி மாபெருங் கோவில்களில் ஒன்றை இந்த நாளில் நாம் கட்ட முடியுமா? கட்டலாம் என்று கனவு காணவேனும் முடியுமா? பழைய காலத்தில் இப்படிப்பட்ட கோபுரங்களையெல்லாம் நம் முன்னோர்கள் எப்படிக் கட்டினார்கள்? அவர்களுக்கு எவ்வளவு பக்தியும் சிரத்தையும் விடா முயற்சியும் காரியத் திறமையும் இருந்திருக்க வேண்டும்?

ஆகையினால்தான் நம்முடைய மகா கவி பாரதியார்,

— "மக்கள்
துங்கம் உயர்ந்து வளர்கெனக் கோயில்கள்
சூழ்ந்ததும் இந்நாடே!"

என்று பாடினார். நம்முடைய முன்னோர்கள் நாகரிகத்திலும் பண்பாட்டிலும் எவ்வளவு உயர்ந்து சிறந்து விளங்கினார்கள் என்பதற்குத் தமிழ் நாட்டுக் கோயில்களும் அக் கோயில்களின் வானளாவும் கோபுரங்களும் அத்தாட்சிகளாக விளங்குகின்றன.

நம் முன்னோர்கள் ஆலயங்கள் கட்டியதோடு நின்றார்களா? பின்னால் நீடித்த காலம் ஆலயங்களில் பூஜை நடப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் வெகு முன் யோசனையுடன் செய்தார்கள். பூஜைக்கும் நைவேத்தியத்துக்கும் தூப தீப அலங்காரத்துக்கும் பூமாலை தொடுப்பதற்கும் சந்தனம் அரைப்பதற்கும் வேதம் ஓதுவதற்கும் கீதம் பாடுவதற்கும் கட்டுக்காவலுக்கும் கூட்டிப் பெருக்கும் கைங்கரியத்துக்கும் சிதிலமான பகுதிகளைச் சீர்திருத்துவதற்கும் தனித்தனியாக மான்யங்களை ஏற்படுத்தி வைத்தார்கள்.

ஆலய வழிபாட்டு முறையில் மிக முக்கியமானது விளக்கேற்றி வைத்தல். கோயில்களுக்குள்ளே குத்து விளக்குகள் அகல் விளக்குகள் ஏற்றிவைக்க வேண்டும். கோயில்களுக்கு வெளியே சுவாமி புறப்பாட்டின்போது தீவர்த்திகள் கொளுத்த வேண்டும்.

இதற்கெல்லாம் ஏராளமாக எண்ணெய் வேண்டும் அல்லவா? இதை உத்தேசித்து ஒவ்வொரு கோயிலின் விஸ்தாரத்துக்கும் தகுந்தாற் போல் இலுப்ப மரத் தோப்புகள் வைத்து வளர்த்தார்கள்! ஆயிரக்கணக்கான இலுப்ப மரங்களை வைத்துப் பயிராக்கினார்கள்!

தெய்வ வழிபாட்டுக்கு ஆலயங்களைக் கட்டியதுபோல் சமயப் பிரசாரத்துக்குக் குரு பீடங்களையும் மடாலயங்களையும் ஏற்படுத்தினார்கள். அவற்றின் பராமரிப்புக்கு வேண்டிய சொத்துக்களையும் தேடி வைத்தார்கள்.

மடாதிபதிகள் பற்றறுத்த துறவிகள் ஆதலால், அவர்களுடைய நிர்வாகத்திற்கு அநேக தேவாலயங்களை உட்படுத்தினார்கள். ஆலய நிர்வாகம் சரிவர நடைபெற வேண்டும் என்றுதான் அவ்வாறு செய்தார்கள்.

* * *

தென்னாட்டு மக்கள் பரம்பரை பாத்தியமாகப் பெற்ற பழைய செல்வங்களுக்குள்ளே நம் புராதன ஆலயங்கள் மிகச் சிறந்தவை. அவற்றைப் பாதுகாப்பதும் தூய்மையாக வைத்துக் கொள்வதும் பழைய முறைகளின்படி பூஜா கைங்கரியங்கள் சரிவர நடக்க ஏற்பாடு செய்வதும் நமது தலை சிறந்த கடமையாகும். தெய்வத்துக்கு உகந்த கைங்கரியமாகும்.

மனிதர்கள் குறையுள்ளவர்கள். எவ்வளவு திறமையாகவும் முன்யோசனையுடனும் காரியங்களைச் செய்திருந்தாலும் அவற்றில் சில குறைகள் இல்லாமற் போகாது. நாளடைவில் குறைகள் பெருகி வளர்வது உலக இயற்கை.

மிக உயர்ந்த நோக்கங்களுடன் ஆரம்பிக்கப்படும் பொது ஸ்தாபனங்களில் எப்படியோ ஊழல்கள் மலிந்துவிடுவதைப் பார்க்கிறோம்.

உதாரணம் வேண்டுமா? நம் காலத்தில் மகான்களும் தியாகமூர்த்திகளும் தேசபக்தர்களும் ஆரம்பித்த காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஊழல்கள் மலிந்துவிட்டன என்ற பேச்சை அடிக்கடி நாம் கேட்கிறோமல்லவா? நம் தலைவர்களே அவ்விதம் சொல்லுகிறார்கள் அல்லவா? காங்கிரஸ் ஸ்தாபனத்தைத் தூய்மைப் படுத்துவதற்கு அடிக்கடி முயற்சி செய்து வருகிறார்கள் அல்லவா?

நம்முடைய காலத்தில் தூய்மையே உருக்கொண்ட தலைவர்கள் ஆரம்பித்து நடத்தும் ஸ்தாபனங்களிலே இவ்வளவு சீக்கிரத்தில் ஊழல்கள் மலிவதற்கு இடமிருக்கும்போது, மூந்நூறு வருஷம், ஐந்நூறு வருஷம், ஆயிரம் வருஷத்துக்கு முன்னால் ஸ்தாபிக்கப்பட்டுப் பல தலைமுறைகளாக நடத்தப்பட்டும் வரும் ஸ்தாபனங்களில் குறைகளும் ஊழல்களும் ஏற்படுவதில் வியப்பு ஒன்றுமில்லை.

நம் முன்னோர்கள் எவ்வளவோ பக்தி சிரத்தையுடன் நிர்மாணித்த தேவாலய மடாலய நிர்வாகங்களில் நாளடைவில் ஊழல்கள் மலிந்துவிட்டன.

பூஜைக்கும் நைவேத்தியத்துக்கும் தீபாலங்காரத்துக்கும் சுவாமி புறப்பாட்டுக்கும் ஏற்பட்டிருந்த ஆலயச் சொத்துக்களைக் கோயில் பெருச்சாளிகள் சூறையிட்டுச் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர்!

ஐம்பது வருஷத்துக்கு முன்னாலேயே ஆஸ்திக புத்தியுள்ள அறிஞர்கள் பலர் தேவாலய மடாலய நிர்வாகத்தின் சீர்கேட்டைக் கண்டு வருந்தினார்கள். அந்தச் சீர்கேடுகளை ஒழிக்கச் சட்டம் செய்ய வேண்டும் என்று சொன்னார்கள். அந்தக் காலத்துப் பத்திரிகைகள் மேற்படி கோரிக்கையை ஆதரித்து எழுதின.

பல நாளாக நாட்டில் நடந்துவந்த கிளர்ச்சி ஓரளவு 1927-ம் வருஷத்தில் பலன் அளித்தது. நேர்மைக்கும் நீதிக்கும் அஞ்சா நெஞ்சத்துக்கும் சமயப் பற்றுக்கும் பெயர்போன மாஜி நீதிபதி ஸர் டி. சதாசிவய்யர் அவர்களுடைய தலைமையில் 'ஹிந்து மத தர்ம ஸ்தாபன பரிபாலன சபை' அமைக்கப்பட்டது. ஆலய நிர்வாக ஊழல்களை ஒழிக்கும் துறையில் இந்தச் சபைக்குச் சிற்சில அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. அந்த அதிகாரங்களைப் பயன் படுத்தியதன் மூலம் ஆலயங்களின் நிர்வாகம் ஓரளவு சீர்திருந்தியது. ஆனால் அரை குறையான அதிகாரங்களைக் கொண்டு பூரண சீர்திருத்தம் செய்ய முடியாதுதானே? மேலும், 'ரிலிஜியஸ் என்டோமென்ட்ஸ் போர்டு' அங்கத்தினர் அனைவருமே உயர்ந்த ஒழுக்க சீலர்களாகவும் திறமையாளர்களாகவும் நியமிக்கப்படவில்லை. இதன் காரணமாக தேவாலய மடாலயங்களின் நிர்வாகம் முழுதும் சீர்ப்படவில்லை.

1937-38ல் ராஜாஜி மந்திரி சபை சிலகாலம் நடந்த காலத்தில் தர்ம ஸ்தாபன நிர்வாக இலாகா டாக்டர் ராஜன் அவர்களுடைய ஆதிக்யத்தில் இருந்தது. டாக்டர் ராஜன பரமபக்தியுள்ள ஆஸ்திகர். நமது சமயங்களிலும் சமயக் கோட்பாடுகளிலும் சம்பிரதாயங்களிலும்கூட நம்பிக்கை அதிகம் உள்ளவர். ஆலயங்களில் தெய்வ சந்நிதானங்களில் மேல் வேஷ்டியை இடுப்பில் கட்டிக் கொண்டு சாஷ்டாங்கமாக நமஸ்கரிப்பவர்.

இத்தகைய பரமபக்தரான டாக்டர் ராஜன், ராஜாஜி மந்திரி சபை நடந்த போது, ஆலயங்கள் — மடங்களின் நிர்வாகத்தைக் கவனித்தார். என்டோமென்ட் போர்டின் மேற்பார்வை அதிகாரத்தைக் கொண்டு ஆலய மடாலய நிர்வாகத்தின் ஊழல்களைப் போக்கித் தூய்மைப் படுத்துவது அசாத்தியம் என்று கண்டார். ஆகையால், மேலும் திறமையாக ஆலய நிர்வாகத்தை மேற்பார்வை செய்வது சாத்தியமாகும்படி சர்க்காருக்கு அதிகாரங்களைக் கொடுக்கும் மசோதா ஒன்றைத் தயாரிக்கத் தொடங்கினார்.

ராஜாஜி மந்திரி சபை அச்சமயத்தில் வேறு காரணங்களினால் ராஜினாமா செய்யும்படி நேர்ந்தது.

* * *

ஒன்பது வருஷத்துக்குப் பிறகு ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியானார். இலாகாப் பிரிவினை விஷயம் யோசிக்கப்பட்டபோது பிரதம மந்திரி தம்முடைய வசத்தில் தேவாலய மடா

லய நிர்வாகத்தை மட்டும் வைத்துக் கொண்டார். (பின்னால் அவரிடம் வேறு இலாகாக்கள் வந்து சேர்ந்தன.)

பிரதம மந்திரி ஓமந்தூர் ரெட்டியார் மீது பலருக்குப் பல குறைகள் இருக்கலாம். அவர் பிரதம மந்திரியாயிருக்கலாமா, கூடாதா என்பதைப் பற்றியும் அரசியல் வாதிகளுக்குள் பலமான அபிப்பிராய பேதம் இருக்கலாம்.

ஆனால் ஸ்ரீ ஓமந்தூர் ரெட்டியார் ஆழ்ந்த சமயப் பற்றுள்ளவர் என்பது பற்றி எந்தவித அபிப்பிராய பேதமும் இருக்க முடியாது.

கனம் ரெட்டியார் ஹிந்து மதத்தில் பற்றுள்ளவர்; ஹிந்துமத தெய்வங்களிடம் பக்தியுள்ளவர்; ஹிந்து சமயக் கோட்பாடுகளிலும் சம்பிரதாயங்களிலும் நம்பிக்கையுள்ளவர்; நெற்றியில் விபூதி - குங்குமம் தரிப்பது போன்ற ஹிந்து சமயத்தின் வெளிப்படைச் சின்னங்களைக்கூடப் பக்தி சிரத்தையுடன் அனுஷ்டித்து வருகிறவர்.

ஆலயங்களின் சந்நிதியில் அவர் பரவசமடைந்து நிற்பவர்; தேவார திருவாசகங்களைக் கேட்டு உருகி ஆனந்தக் கண்ணீர் வடிப்பவர். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரையும் ஸ்ரீ ரமண ரிஷிகளையும் தெய்வாம்சம் பொருந்திய குருநாதர்களாகக் கொண்டு பக்தி செலுத்திப் பூசிப்பவர்.

ஸ்ரீ ஓமந்தூர் ரெட்டியார் நம்முடைய சமயக் கோட்பாடுகளுக்கோ ஆலய வழிபாட்டுக்கோ கேடு விளைக்கும் காரியத்தைச் செய்துவிடுவார் என்று ஒரு நாளும் சொல்ல முடியாது.

பிரதமர் ரெட்டியார் அவர்கள் ஆலய நிர்வாகத்தைப் பற்றிய இரண்டு வருஷ யோசனைக்கும் அநுபவத்துக்கும் பிறகு டாக்டர் ராஜன் தயாரித்த பழைய மசோதாவைக் கண்டெடுத்து அதில் செய்ய வேண்டிய சீர்திருத்தங்களைச் செய்து சட்டசபையில் ஆஜர் செய்தார். இந்த மசோதாவைப் பற்றிப் பிரதம மந்திரியும் டாக்டர் ராஜனும் செய்த பிரசங்கங்கள் அவர்களுடைய பக்தி சிரத்தையையும் அந்தரங்க சுத்தியையும் எடுத்துக் காட்டின. இந்த மசோதாவை அவர்கள் மகத்தான தெய்வ கைங்கரியம் என்று கருதியே கொண்டுவந்திருக்கிறார்கள் என்று தெளிவாயிற்று.

சட்டசபையிலும் வெளியிலும் மசோதாவுக்கு எதிர்ப்புகள் ஏற்பட்டன. எதிர்த்தவர்களின் ஆட்சேபங்களுக்குத் தக்க பதில்கள் சொல்லப்பட்டன. மசோதாவை இரு சட்டசபைகளும் ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளச் சம்மதித்தன. இனி மசோதாவை நுட்பமாகப் பரிசீலனை செய்வதற்கு இரு சட்டசபை அங்கத்தினருமாக இருபது பேர் அடங்கிய ஸெலக்ட் கமிட்டி நியமிக்கப் பட்டிருக்கிறது.

* * *

மசோதாவைச் சட்டசபையில் தீவிரமாக எதிர்த்தவர் தேசபக்தர் ஸ்ரீ எ. வைத்திநாதய்யர் அவர்கள்.

ஜனநாயக அரசாட்சி நடைபெறும் தேசங்களில் அரசாங்கத்தை நடத்தும் கட்சியைப் போலவே அரசாங்கத்தை எதிர்க்கும் கட்சியும் முக்கியம் பொருந்தியதாகக் கருதப்படும்.

ஜனநாயகம் நல்ல முறையில் நடப்பதற்கு இரு கட்சிகள் அவசியம்.

ஒரே கட்சியாயிருந்தால் அந்தக் கட்சிக்காரர்கள் வைத்ததே சட்டமாகி விடும். அவர்களுடைய காரியங்களில் உள்ள குறைபாடுகளை எடுத்துக் காட்ட யாரும் இருக்கமாட்டார்கள்.

எதிர்க்கட்சி இருந்தால்தான் அரசாங்கத்தின் காரியங்களை நன்கு பரிசீலனை செய்வது சாத்தியமாகும். வாதப்பிரதிவாதங்களின் மூலம் உண்மை வெளியாகும். சர்க்கார் கட்சியினர் தங்களுடைய தவறுகளைத் திருத்திக்கொள்ள வசதி ஏற்படும்.

இந்தியா தேசம் இப்போதுதான் சுதந்திரம் அடைந்திருக்கிறது. சுதந்திரப் போர் நடத்திச் சுதந்திரம் சம்பாதித்தவர்கள் காங்கிரஸ் வாதிகள். எனவே காங்கிரஸ் கட்சியார் சட்டசபைகளில் மிகப் பெரும்பாலோராயிருக்கின்றனர். எதிர்ப்புக் கட்சியே கிடையாது; இருந்தாலும் அவர்களுக்குப் பலம் கிடையாது; நாட்டில் அவர்களுக்குச் செல்வாக்கும் கிடையாது.

உண்மையான ஜனநாயக ஆட்சி நடைபெறுவதற்கு இது ஒரு குறை. முக்கியமாக, மத சம்பந்தமான காரியங்களில் தலையிட்டுச் சீர்திருத்தச் சட்டங்கள் செய்யச் சர்க்கார் முன் வரும் போது எதிர்க் கட்சி ஒன்று இருப்பது மிகவும் அவசியம்.

எதிர்க் கட்சி செய்யவேண்டிய கைங்கரியத்தை இந்த மசோதா விஷயத்தில் ஸ்ரீ எ. வைத்திநாதய்யர் செய்து வந்திருக்கிறார். மசோதாவைக் கண்டித்து எதிர்த்து வந்திருக்கிறார்.

காங்கிரஸ் கட்சியின் கட்டுப்பாட்டை இந்த அளவுக்குத் தளர்த்திக் கொடுத்து

மசோதாவை எதிர்ப்பதற்கு ஸ்ரீ ஏ. வைத்திநாதய்யருக்குச் சந்தர்ப்பம் அளித்ததைப் பெரிதும் பாராட்ட வேண்டும். மத சம்பந்தமான இந்த மசோதாவின் விஷயத்தில் சொல்லக் கூடிய ஆட்சேபங்களையெல்லாம் யாராவது எடுத்துச் சொல்வது அவசியம். ஆட்சேபங்களை ஜனங்கள் அறிந்து கொள்ளவும் ஆட்சேபங்களுக்குச் சொல்லப்படும் சமாதானங்களைக் கேட்டுத் தெளிவதும் மிகவும் அவசியம்.

இத்தகைய கைங்கரியத்தைச் செய்த ஸ்ரீ ஏ. வைத்திநாதய்யருக்கும் அவருக்கு இந்தத் தொண்டு செய்யும் வசதி அளித்த காங்கிரஸ் கட்சித் தலைவர்களுக்கும் மிக்க வந்தனம்.

* * *

மசோதாவை மிக நுட்பமாகப் பரிசீலனை செய்து முடிவாகச் சட்டமாக்கும் முறையில் அதைத் தயாரிக்க நியமித்திருக்கும் ஸெலக்ட் கமிட்டியில் ஸ்ரீ ஏ. வைத்திநாதய்யரும் அங்கத்தினராக நியமிக்கப்பட்டிருப்பது திருப்திகரமான விஷயம்.

ஸ்ரீ ஏ. வைத்திநாதய்யர் மசோதாவில் காணப்படும் குறைகளை ஸெலக்ட் கமிட்டியில் மறுபடியும் எடுத்துக் காட்டலாம். கூடுமானவரை அவற்றை நிவர்த்திக்க மற்றவர்கள் ஒப்புக் கொள்ளலாம்.

மசோதாவை முடிவான வடிவத்தில் தயாரிக்கும்போது இரண்டு விஷயங்களைக் கவனித்துக் கொள்ள வேண்டும்.

(1) ஆலயங்களையும் மடாலயங்களையும் நல்ல முறையில் நிர்வகிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமே தவிர, சமயக் கோட்பாடுகளிலோ பூஜை விதிகளிலோ சர்க்கார் அதிகாரிகள் தலையிடுவதற்குச் சட்டத்தில் இடமிருக்கக் கூடாது.

(2) பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் நம் மடாதிபதிகளைச் சமயகுரவர்களாகவும் ஆச்சாரிய புருஷர்களாகவும் மதிக்கிறார்கள். அத்தகைய குரு பீடங்களின் மதிப்புக்கும் மடாதிபதிகளின் கௌரவத்துக்கும் எந்த விதத்திலும் பங்கம் நேரும்படிச் சட்டத்தில் எந்த விதியும் இருக்கக் கூடாது.

இந்த இரண்டு அம்சங்களையும் மனதில் வைத்துக் கொண்டு, ஆலயங்களிலும் மடாலயங்களிலும் உள்ள ஊழல்களைப் போக்கித் தூய்மைப் படுத்தித் திறமையான நிர்வாகத்துக்கு ஏற்பாடு செய்யும் வகையில் மசோதா முடிவாக உருவாகிச் சட்டமாக்கப்பட வேண்டும்.

இவ்விதம் முடிவாக உருவாகி வரும் மசோதாவின் பேரில் வாதப் பிரதிவாதங்கள் அதிகமாக ஏற்படாமல் காங்கிரஸ் கட்சி அங்கத்தினர் அனைவரும் ஒருமுகமாக அதை ஆதரித்து நிறைவேற்றக் கூடியதாயிருந்தால் அனைவருக்கும் திருப்தியாயிருக்கும்.

---

# வரி வசூல் விஷயம்




யார் பேரில் என்ன வரி போட்டாலும் கடைசியாகக் கோடியில் நிற்கும் அப்பாவி மனிதன் தலையிலேயே வந்து விடிகிறது!

# வரவு செலவுத் திட்டங்கள்

இந்திய அரசாங்கத்தின் புது வருஷ வரவு செலவுத் திட்டம் வெளியாகி யிருக்கிறது. அதைப் படித்ததும் இந்தியாவின் நிதி நிலைமையைக் குறித்து யாருக்கும் ஓரளவு திருப்தி உண்டாகும்.

இந்தியா சுதந்திரம் பெற்று ஒன்றரை வருடத்துக்குள் கண்டங்கள் பல நேர்ந்தன. உலக சரித்திரத்திலே கண்டும் கேட்டும் இராத திடுக்கிட வைத்த கண்டங்கள் நேர்ந்தன. எனினும் அவைகளால் இந்தியாவின் நிதி பலத்தைச் சீர்குலைக்க முடியவில்லை.

சென்ற மகா யுத்தத்தின் விளைவாக விசுவரூபம் எடுத்த பயங்கரமான பிரச்னைகள் பிரிட்டன், பிரான்ஸ் முதலிய வல்லரசுகளைக் கூடத் திகைக்கச் செய்தன.

யுத்தத்தினால் எழுந்த பிரச்னைகளோடு அவற்றைக் காட்டிலும் பயங்கரமான புதிய பிரச்னைகள் சுதந்திர இந்தியாவை எதிரிட்டு நின்றன. பாகிஸ்தான் பிரிவினையால் ஏற்பட்ட பயங்கரமான இரத்தக் களறியோடு ஈடு செய்ய முடியாத பொருளாதார கஷ்டம் இந்தியாவுக்கு ஏற்பட்டது.

பாகிஸ்தானிலிருந்து ஓடி வந்து அடைக்கலம் புகுந்த அகதிகளுக்காகச் சென்ற வருஷம் இந்திய சர்க்கார் இருபது கோடி ரூபாய் செலவழித்தனர். இந்த வருஷம் பத்து கோடி ரூபாய் செலவாகும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள்.

உணவுப் பொருளை அதிக விலைக்கு வாங்கிக் குறைந்த விலைக்கு ஜனங்களுக்குக் கொடுத்ததால் சென்ற வருஷம் 32 கோடி ரூபாய் செலவாயிற்று. இந்த வருஷமும் அதே இனத்தில் 33 கோடி ரூபாய் செலவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சுதந்திர சர்க்கார் ஏற்பட்டதிலிருந்து இதுவரையில் உணவுப் பொருள் சகாயத்துக்காக மொத்தம் நூறு கோடி ரூபாய் செலவு செய்திருக்கிறார்கள்.

இப்படி யெல்லாம் எதிர்பாராத பெருஞ் செலவினங்கள் ஏற்பட்டும் இந்திய சர்க்காரின் வரவுக்கும் செலவுக்கும் கிட்டத்தட்ட சரிக்கட்டுவது சாத்தியமாகிறது என்பது பெரிய காரியமாகும்.

பிரஸ்தாப வருஷத்தில் இந்திய சர்க்காருக்குக் கிடைக்கக் கூடிய வருமானம் 307 கோடியே 74 லட்சம் என்றும், செலவு 322 கோடியே 53 லட்சம் என்றும் மதிப்பிடப்பட்டிருக்கிறது. எனவே, வருமானத்தைக் காட்டிலும் 14 கோடியே 79 லட்சம் ரூபாய் அதிகம் செலவு ஆகும்.

மேற்படி அதிகச் செலவை ஈடு செய்ய நிதி மந்திரி டாக்டர் மத்தாய் சில இனங்களில் வரிகளை உயர்த்த உத்தேசித்துள்ளார். நாட்டின் தொழில் வளப் பெருக்கத்தைக் கருதிச் சில வரிகளைக் குறைக்கப் போகிறார்.

வருஷத்தில் 10,000 ரூபாய்க்குக் குறைந்த வருமானம் உடையவர்களுக்கு வருமான வரி ரூபாய்க்குக் காலணா விதம் குறைக்கப்படும்.

பெரிய வருமானம் உள்ள தொழில்களில் ஈடுபடுவோருக்கு வருமான வரி, அதிக வருமான வரி முதலியவை கொடுத்த பிறகு லாபமே மிஞ்சுவதில்லை என்ற புகார் இருந்தது. இதனால் பெரும் பணக்காரர்கள் புதிய தொழில்களில் பணத்தைப் போட விருப்பமில்லா திருந்தார்கள்.

புதிய பட்ஜெட்டின்படி எல்லா வித வருமான வரிகளும் சேர்ந்து ரூபாய்க்குப் பதினொரு அணாவுக்கு மேல் போகாது.

உயர்த்தப்படும் வரி இனங்களில் முக்கியமானவை வருமாறு: பெட்ரோல் வரி, கொட்டைப் பாக்கு வரி, சர்க்கரை வரி, மோட்டார் டயர் வரி, மில் துணி வரி ஆகியவை.

செயற்கைப் பட்டு நூல், கண்ணாடிச் சாமான்கள், ஸ்டேஷனரி சாமான்கள், போட்டோ சாதனங்கள், கெடிகாரங்கள் முதலியவற்றுக்கு இறக்குமதித் தீர்வை அதிகமாக்கப்படும்.

தபால் கார்டுகளின் விலையை முக்கால் அணாவாகவும், கவரின் விலையை இரண்டு அணாவாகவும் உயர்த்தும் யோசனையை யாரும் உற்சாகமாக வரவேற்க முடியாது.

இந்தியாவின் நிதி நிலைமை பொதுவாகத் திருப்திகரமாக இருக்கிறது என்று இந்தியாவின் நிதி மந்திரி டாக்டர் ஜான் மத்தாய் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்தியாவின் வருமானத்துடன் ஒப்பிடும் போது உள் நாட்டில் இந்திய சர்க்கார் கொடுக்க வேண்டிய கடன் தொகை பெரிதல்ல என்று தெரிவித்திருக்கிறார். இந்தியாவுக்கு வெளி நாடுகளில் ஏராளமாகச் சொத்துக்கள் இருக்கின்றனவே யன்றிக் கடன் இல்லை என்று நிதி மந்திரி அறிவித்திருப்பதைக் காட்டிலும் நமது தேசத்தினுடைய செல்வ நிலையின் உயர்வை நிரூபிக்க வேறெதுவும் தேவையில்லை.

* * *

சென்னை சர்க்காரின் வரவு செலவுத் திட்டத்தை மாகாண நிதி மந்திரி கனம் கோபால ரெட்டி சமர்ப்பித்திருக்கிறார். இந்தத் திட்டத்திலிருந்து சென்னை மாகா



இந்தியாவின் 'கவிதைக் குயில்' என்று பெயர் பெற்றவரும் இந்தியப் பெண் குலத்துக்கு இணையில்லாத உயர்வு அளித்தவரும் காந்தி மகாத்மாவின் பிரிய சிஷ்யையுமான ஸ்ரீமதி சரோஜினி தேவி சென்ற புதன் கிழமை காலை 2-45 மணிக்குக் காலஞ் சென்றார். பாரதத் தாயும் நாற்பது கோடி இந்திய மக்களும் கண்ணீர் வடித்தார்கள்.

ணத்தின் நிதி நிலைமையும் திருப்திகரமா யிருக்கிற தென்று தெரிய வருகிறது. கலால் வருமானம் 17 கோடி ரூபாய் நஷ்டமான பிறகும் சென்னை சர்க்காரின் வருமானம் 51 கோடியே 75 லட்சம் ரூபாய் என்பது திருப்தி யளிக்கும் நிலைமை அல்லவா?

இந்த 51 கோடி 75 லட்சத்துக்குள் சர்க்காரின் செலவை ஸ்ரீ கோபால ரெட்டி சரிக்கட்டி யிருக்கலாம். அப்படிச் சரிக்கட்டி யிருந்தால் "மதுவிலக்கினால் குடி முழுகிவிடும்" என்று கூச்சலிட்டவர்களுக்குச் சரியான பதில் கொடுத்ததா யிருக்கும்.

அதற்குப் பதிலாக, 55 கோடி 66 லட்சத்துக்கு மாகாண நிதி மந்திரி செலவுத் திட்டம் போட்டிருக்கிறார். அதிகச் செலவு நாலு கோடி ரூபாயை ஈடு செய்யப் பல புதிய வரிகளைத் தூக்கிப் போடுகிறார்.

இந்திய சர்க்காருக்கு எதிர்பாராத பல செலவுகள் ஏற்பட்டிருக்கின்றன. அதனால் வரிகள் போட்டே தீர வேண்டும். சென்னை சர்க்காருக்கு அத்தகைய அவசியம் இல்லை.

புதிய வரிகள் விதிப்பதில் சென்னை நிதி மந்திரி சரியான முறையைக் கையாளவில்லை என்பதையும் சொல்ல வேண்டும்.

விவசாயிகள் உற்பத்தி செய்யும் விளை பொருள்களுக்கு அவர்கள் முதல் தடவை விற்கும்போது விற்பனை வரி கிடையாது என்று தீர்க்காலோசனையின் பேரில் ஏற்பாடு செய்யப்பட்டது.

அதை மாற்றி இப்போது ஸ்ரீ கோபால ரெட்டி தேங்காய், எண்ணெய் விதைகள், கரும்பு, மிளகாய், காப்பி, உருளைக்கிழங்கு, மிளகு, மஞ்சள், வாழைப் பழம் முதலிய விளை பொருள்களுக்கு முதல் தடவை விற்கும்போதே விற்பனை வரி விதிக்கிறார். இதனால் விவசாயிகளுக்குத் தொந்தரவு அதிகமாகுமே யன்றி சர்க்காருக்குப் பிரமாதமான தொகை கிடைத்துவிடப் போவதில்லை.

ஏற்கெனவே சர்க்கார் பஸ்களின் கட்டணங்களை உயர்த்தியுள்ள நிதி மந்திரி இப்போது பஸ் கட்டணங்களின்மேல் வரிவிதிப்பது மிகவும் ஆட்சேபத்துக்கு இடமானது.

சென்னை நகரில் பஸ் போக்கு வரவு நிர்வாகத்தை சர்க்கார் ஏற்றுக் கொண்டதிலிருந்து இதுவரையில் சுமார் பதினைந்து லட்சம் ரூபாய் லாபம் கிடைத்திருக்கிறது என்று நிதி மந்திரி அறிவித்திருக்கிறார். ஆனாலும் சென்னைக்கு வெளியே மற்ற ஜில்லாக்களில் பஸ் போக்கு வரவு நிர்வாகத்தைச் சர்க்கார் இப்போது ஏற்றுக் கொள்ள உத்தேசிக்கவில்லை என்று தெரிவித்திருக்கிறார்.

நிதி மந்திரியின் கூற்றிலிருந்து மூன்று கேள்விகள் எழுகின்றன:—

1. லட்சக் கணக்கில் லாபம் கிடைத்திருக்கும்போது சர்க்கார் சென்னை நகரில் பஸ் கட்டணங்களை உயர்த்திப் பொது ஜனங்களின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொள்வானேன்?

2. பஸ் கட்டணங்களை உயர்த்தியது போதாது என்று இப்போது மேலும் வரி போட்டுப் பிரயாணிகளின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வானேன்?

3. பஸ் விடுவது லாபகரம் என்று தெரிந்திருக்கும்போது மற்ற ஜில்லாக்களிலும் பஸ் விடுவதை மேற்கொண்டு சர்க்கார் பணம் திரட்டாமல், விளைபொருள்களுக்கு விற்பனை வரி விதித்து விவசாயிகளுக்கு வீண் தொந்தரவைக் கொடுப்பானேன்?

கனம் கோபால ரெட்டியாரிடம் இந்தக் கேள்விகளுக்குத் தகுந்த பதில் எதிர்பார்க்க முடியாது என்பதை நாம் அறிவோம்.

"பஸ் கட்டணங்களை அப்படித்தான் அதிகப் படுத்துவேன். பிரயாணிகள் அதிகக் கட்டணம் கொடுக்க இஷ்டப்படா விட்டால் நடந்து போகட்டும்" என்று பதில் சொன்னவர் அல்லவா?

# இதோ ஒரு சிம்மம்!

சென்ற பிப்ரவரி மாதக் கடைசியில் இந்தியாவின் உதவிப் பிரதம மந்திரி சர்தார் வல்லபாய் படேல் தென்னாட்டுக்கு விஜயம் செய்திருந்தார். சென்னை, பங்களூர், ஹைதராபாத் நகரங்களில் சிற்சில தினங்கள் தங்கினார். அன்புடனும் ஆர்வத்துடனும் பக்தி சிரத்தையுடனும் கூடிய லட்சக் கணக்கான ஜனங்களுக்குத் தரிசனம் தந்தார். தேசத்துக்குத் தற்சமயம் பரம முக்கியமாக உள்ள பல விஷயங்களைப் பற்றியும் பேசினார். பிறகு டில்லிமா நகரத்துக்குப் பத்திரமாகப் போய்ச் சேர்ந்தார்.

சர்தார் படேலுக்கு வயது எழுபத்தைந்து ஆகிறது. முப்பது வருஷத்துத் தேச சேவையில் அடைந்த கஷ்ட நஷ்டங்களினால் அவருடைய தேகம் தளர்ந்திருக்கிறது; அவருடைய இருதயம் இரத்த ஓட்டம் குன்றிப் பலவீனம் உற்றிருக்கிறது; இதனால் உடல் நலத்தைச் சர்வ ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டிய அவசியம் சர்தாருக்கு உண்டு.

ஆனாலும் சர்தாருடைய இரும்பு நெஞ்சத்தின் உறுதியையும் அஞ்சாத உள்ளத்தின் வீரத்தையும் திட சித்தத்தின் வன்மையையும் அவருடைய கம்பீரமான முக பாவத்திலே நாம் கண்டோம்; அவருடைய நடை உடை பாவனைகளிலே நன்கு பார்த்தோம்; அவருடைய பட்டவர்த்தனமான பேச்சுக்களின் மூலம் ஐயமற அறிந்து கொண்டோம்.

சர்தார் வல்லபாயைக் குஜராத்தின் சிம்மம் என்று சொல்வதுண்டு. நமது அட்டைப் படத்தைச் சற்று உற்றுப் பார்த்துக் கவனியுங்கள். அவருடைய முகப் பொலிவையும் சிரிப்பின் இயல்பையும் கவனியுங்கள். பிறகு, அவர் அமர்ந்திருக்கும் நாற்காலிக் கையினுடைய முனையில் செதுக்கியுள்ள சிங்க முகத்தையும் கொஞ்சம் கவனியுங்கள். இரண்டு முகங்களுக்கும் எவ்வளவு ஒற்றுமை? எவ்வளவு அருமையான பொருத்தம்? மாந்தர் குல சிம்மம் சிங்காதனத்தில் அமர்ந்து சிங்கநாதம் செய்கிறது என்று சொன்னாலும் மிகப் பொருத்தமாயிருக்கும் அல்லவா?




சிங்கம் கர்ஜனை செய்யத் தொடங்கும் போது, தம்புராச் சுருதி கூட்டிக் கொண்டும் சப்த ஸ்வரங்களை ஆதாரமாக வைத்துக் கொண்டும் கைசிக நிஷாதம் காகலி நிஷாதம் முதலிய ஸ்வரபேதங்களைக் கவனப்படுத்திக் கொண்டும் கர்ஜனை செய்யத் தொடங்குவதில்லை! சிங்கமானது தன்னுடைய கம்பீரமான குரலை இஷ்டம் போல விட்டுக் கர்ஜனை புரிகிறது! அவ்வளவுதான்; — வனவனாந்தரங்களில் உள்ள பல்வேறு மிருகங்கள் பட்சிகள் எல்லாம் நடுநடுங்குகின்றன!

அதுபோலவே சர்தார் படேல் அதிசயோக்திகளுடனும் உபமான உபமேயங்களுடனும் நவரஸங்களைப் புகுத்தி விக்யாசம் செய்து பேசுவதில்லை.

மனதிலே தோன்றிய உண்மைகளை அப்படி அப்படியே அப்பட்டமாக எடுத்துச் சொல்கிறார். அவருடைய வார்த்தைகள் பீமசேனனுடைய கதாயுதத்தைப் போல் விரோதிகளின் தலையில் படார் என்று விழுகின்றன; ஸ்ரீ கிருஷ்ணனுடைய சக்ராயுதத்தைப் போல் எதிரிகளின் சூழ்ச்சிகளை அறுத்து எறிகின்றன; ஸ்ரீ ராமபிரானுடைய கோதண்டத்தின் டங்கார சப்தத்தைப் போல் தேச மக்களுக்கு அபயமளித்து உயிர் ஊட்டுகின்றன; 'பயமில்லை, ஜயமுண்டு!' என்று உலகறிய முரசு கொட்டித் தெரியப்படுத்துகின்றன.

காந்தி மகாத்மா நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்யுங் காலங்களில் அநேகமாகச் சிற்சில முக்கிய விஷயங்களைப் பற்றியே பேசுவது வழக்கம். ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பித்த நாட்களில் சட்ட சபை பகிஷ்காரம், கலாசாலை பகிஷ்காரம், கோர்ட் பகிஷ்காரம்—இவைகளைப் பற்றியே எல்லா ஊர்களிலும் பேசுவார். நிர்மாண திட்டத்தில் கவனம் செலுத்திய காலத்தில் கதர், மதுவிலக்கு, தீண்டாமையொழிப்பு ஆகியவைகளைப் பற்றியே அவர் எங்கும் எடுத்துரைப்பார்.

அவ்விதமே சர்தார் படேல் அவர்களும் தென்னிந்திய விஜயத்தின் போது சில முக்கிய விஷயங்களைப்

பற்றி வற்புறுத்திப் பேசினர். "இந்தியாவின் சுதந்திரம் ஒரு வருஷத்துக் குழந்தை; அதை அன்புடன் பேணிக் காப்பாற்றுங்கள்; முரட்டுத்தனத்தைக் கையாண்டு குழந்தையைக் கொன்றுவிடாதீர்கள்!" என்று கேட்டுக் கொண்டார். "உணவைப் பெருக்குங்கள்; உற்பத்தியைப் பெருக்குங்கள்; அப்போதுதான் இந்தியா அடைந்த சுதந்திரம் பலன் பெற்றதாகும்" என்று எடுத்துச் சொன்னர். "தொழிலாளருடைய நன்மையைக் காட்டிலும் எனக்கு முக்கியமானது வேறொன்றும் இல்லை. ஆனல் வேலை நிறுத்தம் செய்யாதீர்கள். வேலை நிறுத்தம் செய்து நாட்டையும் கெடுத்து உங்களையும் கெடுத்துக் கொள்ளாதீர்கள்!" என்று தொழிலாளருக்கு உபதேசித்தார். "தொழிலாளர் க்ஷேமத்தில் எங்களுக்குப் பூரண அக்கரை உண்டு. ஆனல் அரசியல் வாதிகள் தொழிலாளரைப் பயன்படுத்திக்கொண்டு நாட்டில் குழப்பம் விளைவிக்க முயன்றால் பொறுக்க முடியாது; அடக்கியே தீர்வோம்!" என்று எச்சரித்தார். முதலாளிகளுக்கும் வியாபாரிகளுக்கும் "உங்களுடைய சொந்த லாபத்தையே பெரிதாகக் கருதாதீர்கள்! நாட்டிற்கு நன்மை பயப்பதுதான் உங்களுக்கும் நன்மை! கள்ள மார்க்கெட்டை ஒழியுங்கள்! கொள்ளை லாப ஆசையை விடுங்கள்!" என்றார். "எல்லாத் தொழில்களையும் சர்க்கார் எடுத்துக் கொள்ளும் பேச்சு இப்போதைக்கு இல்லை. சர்க்கார் நிர்வாகத்தை நடத்தவே தற்சமயம் போதிய ஆள் பலம் இல்லையே! தொழில்களையும் எடுத்துக் கொண்டு என்ன செய்வோம்?" என்று கூறி ஒரு கடினமான பிரச்னையைத் தெளிவு படுத்தினர். "மன்னர்கள், முதலாளிகள், பணக்காரர்கள் — எல்லாருக்கும் நான் நண்பன் தான். அவர்கள் எல்லாருடைய உதவியையும் தேசத்துக்குப் பயன் படுத்திக் கொள்வேன்!" என்று எடுத்துரைத்தார்.

கம்யூனிஸ்டுகள், ஆர். எஸ். எஸ். காரர்கள் முதலியவர்களுக்கு ஒவ்வொரு தடவையும் கடுமையான எச்சரிக்கை செய்தார். "இந்த அரசாங்கம் உங்களுக்குப் பிடிக்க வில்லையானல் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு பிரசாரம் செய்து அரசாங்கத்தை மாற்றுங்கள். வோட்டுப் பெட்டி மூலம் உங்கள் கட்சியை நிலைநாட்டுங்கள். ஆனல் பலாத்கார முறைகளை அனுசரிப்பவர்களை ஒழித்தே தீருவோம்!" என்றார்.

மேற் கூறிய விஷயங்களைப் பற்றி எல்லா இடங்களிலும் எல்லாக் கூட்டங்களிலும் சர்தார் படேல் பேசியதோடு, சென்னையில் சென்னை மாகாண வாசிகளுக்கு என்று தனியாக இரண்டொரு விஷயங்களைக் குறிப்பிட்டுச் சொன்னர்.

நமது அருமைத் தலைவர் ராஜாஜியைப் பற்றி மனங் கனிந்த புகழுரைகள் சிலவற்றைக் கூறினர்.

"இணையற்ற இராஜரீக நிபுணர்; தியாகத்திலும் ஒழுக்கத்திலும் நிகரற்ற சீலர்; காந்திமகாத்மாவின் இதயத்துக்கு வேறு யாரையும் காட்டிலும் அதிகம் உகந்தவர்! அத்தகைய ராஜாஜி இன்று எங்களுக்கெல்லாம் ஆலோசனைசொல்லி வழி காட்டக் கூடியவரா யிருப்பது எங்களுடைய பாக்கியம்!" என்று சொன்னர்.

"இந்தியாவின் சிம்மாசனத்தில் அமர்ந்து இந்தியா தேசம் முழுவதிலும் ஆட்சி செலுத்தும் ராஜ சக்கரவர்த்தியை நீங்கள் அளித்திருக்கிறீர்கள். இதைக் காட்டிலும் உங்களுக்குப் பெருமை தருவது வேறு என்ன?" என்று கேட்டார்.

"ஒரு காலத்தில் சென்னை மாகாணத்தின் கீர்த்தி இந்தியாவில் ஓங்கி யிருந்தது. கொஞ்ச நாளாக அவ்விதம் இல்லை. கோணல் வழியை விட்டு நேர் வழிக்கு வாருங்கள். மாகாணப் பிரிவினை முத

## சர்தார் யாத்திரை






விய சாதாரண காரியங்களுக்காக உங்களுக்குள் துவேஷத்தை வளர்க்காதீர்கள். காங்கிரஸ் பதவிகளுக்கும் மந்திரி பதவிகளுக்கும் சண்டையிட்டுக் கொள்வதை நிறுத்துங்கள். மறுபடியும் உங்கள் புகழ் ஓங்கும். இந்தியாவுக்கே தலைமை வகித்து நடத்தும் பெருமையை அடைவீர்கள்'' என்று கூறினர்.

சர்தார் வல்லபாயின் இந்த அரிய பொன் மொழிகளைச் சென்னை மாகாண வாசிகளும் முக்கியமாகக் காங்கிரஸ்வாதிகளும் தங்கள் இதயத்தில் வைத்துப் போற்ற வேண்டும்; போற்றி அதன் படி நடக்கவும் வேண்டும்.

* * *

காந்தி மகாத்மாவின் தபோ பலத்தினுல் இந்தியா அடைந்துள்ள சுதந்திர பாக்கியத்தைக் காப்பாற்றிக் கொடுப்பதற்காக நம் சுதந்திர அரசாங்கத்தின் தலைமையில் மும் மூர்த்திகள் இருப்பதாகப் பலரும் கூறியுள்ளார்கள். ஜவாஹர்லால்ஜி, ராஜாஜி, சர்தார்ஜி ஆகியவர்களைத்தான் அவ்விதம் மும் மூர்த்திகள் என்று குறிப்பிடுகிறார்கள்.

மகாத்மாவின் இதயத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்ட இந்த மும்மூர்த்திகளும் சுதந்திரக் குழந்தையைக் காப்பாற்றிக் காந்திஜியின் போதனைகளையும் நிறைவேற்றிக் கொடுக்கத் தகுதி வாய்ந்தவர்கள்; உரிமை பூண்டவர்கள்.

இந்த மும்மூர்த்திகள் நீடூழி வாழ்ந்திருக்க வேண்டும் என்று பாரதத்தாய் தவம் செய்கிருள். அந்தத் தவம் இறைவன் அருளால் நிறைவேறட்டும்.

# சில்லறை விஷயங்கள்

தேவஸ்தான மசோதா சட்டமாகி விட்டால், கோவில்களெல்லாம் சர்க்கார் நிர்வாகத்துக்குக் கீழே வந்துவிடும்; அதாவது அவை 'நேஷனலைஸ்' ஆகிவிடும்.

இனிமேல், கோவில் பிரசாதம் 'நேஷனலைஸ்' ஆன பிரசாதமாயிருக்கும். திருப்பதி மொட்டைகூட 'நேஷனலைஸ்' ஆகியேதீரும்.

பிரசாதத்துக்கும் மொட்டைக்கும் உரிய கட்டணத்தை நிர்ணயிக்கவும், அடிக்கடி அக் கட்டணத்தை உயர்த்தவும் நம்முடைய போக்குவரத்து மந்திரி கோபால் ரெட்டியை நியமிக்கலாம்.

அப்போது சட்டசபையில் கீழ்க்கண்ட பதில்களை ஸ்ரீ கோபால் ரெட்டி அளிப்பாரென்று எதிர்பார்க்கலாம்:—

**கேள்வி:**—மந்திரி கோபால்ரெட்டி எப்போதாவது திருப்பதிக்குப் போய் மொட்டையடித்துக் கொண்டது உண்டா?

**பதில்:**—இல்லை; சமயம் வரும்போது கவனிக்கப்படும்.

**கேள்வி:**—திருப்பதி மொட்டை யடிப்பதற்குக் கட்டணத்தைச் சர்க்கார் திடீரென்று உயர்த்துவதற்கு அவசியம் என்ன நேர்ந்தது?

**பதில்:**—அப்படித்தான் கட்டணத்தைத் திடீரென்று உயர்த்துவோம். இஷ்டப்பட்டவர்கள் மொட்டையடித்துக் கொள்ளட்டும்; இஷ்டப்படாதவர்கள் குடுமியுடன் திரும்பிப் போகட்டும்.

* * *

தேவஸ்தான பரிபாலன மசோதா சட்டசபைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் விவாதிக்கப் பட்டபோது, மொத்த அங்கத்தினர்களில் பாதிப்பேருக்கும் குறைவாகவே வந்திருந்தார்களாம்.

"பாக்கி அங்கத்தினர்கள் எங்கே போயிருந்தார்கள்?" என்று ஸ்ரீ பொது ஜனம் கேட்கிருர்.

பாக்கி அங்கத்தினர்கள் தங்கள் படிச் செலவை உயர்த்துவதற்காகக் கூட்டங்கூடித் தீர்மானம் நிறைவேற்றிக் கொண்டிருந்தார்களோ, என்னமோ?

* * *

மூன்ரும் வகுப்பில் ஜனக்கூட்டத்தைக் குறைப்பதற்கு ரேஷன் முறையைக் கையாளலாம் என்று ரயில்வே உதவி மந்திரி சொல்லியிருக்கிருர். ஆனால் எத்தகைய ரேஷன் முறையைக் கையாளுவது என்பதைப் பற்றி அவர் ஒன்றுமே சொல்லவில்லை.

சென்னையிலிருந்து திருநெல்வேலிக்கு டிக்கட் வாங்கியவர்களைத் திருச்சிராப்பள்ளியில் இறக்கி விட்டுவிட்டு, பாக்கி தூரத்தைக் கால் நடையாக நடந்து போகச் சொல்லுவார்களோ? — எம். எல். என்.

# அலை ஓசை

## கல்கி

### இருபத்து மூன்றாம் அத்தியாயம்

### உல்லாச வேளை

**உ**லகத்து மாநகரங்களுக்குள்ளே நவயௌவன சௌந்தரியம் பெற்று விளங்குவது கல்கத்தா நகரம். அந்த நகர சுந்தரியின் வனப்புமிக்க தோள்களின் மேலே மிதந்து அசைந்தாடிக் கொண்டிருந்த நீலப்பட்டு உத்தரீயத்தைப் போல் இனிய புனல் ததும்பிய ஏரி ஒய்யாரமாக நீண்டு நெளிந்து கிடந்தது. நீல உத்தரீயத்தின் ஓரங்களில் அமைந்த பச்சை வர்ணக் கரையைப் போல ஏரிக்கரையோரமாகப் பசும்புல் படர்ந்திருந்தது.

ஏரியின் நடுவே மரகதச் சோலைகள் செழித்து வளர்ந்திருந்த தீவு சித்திரக் கலைஞனுடைய கற்பனைச் சித்திரமோ என்று சொல்லும்படி விளங்கியது.

ஏரி நீரில் ஆங்காங்கு சில வெண்ணிறப் பறவைகளும் உல்லாசப் படகுகளும் மிதந்து கொண்டிருந்தன.

ஏரியின் மத்தியில் இருந்த சோலைத் தீவிலிருந்து புள்ளினங்கள் கோஷ்டி கானமாகப் பாடிய நாத கீதங்கள் இளங்காற்றில் மிதந்து வந்து நாலாபுறமும் இசை இன்பத்தைப் பரப்பின.

உல்லாசத்துக்குரிய மாலை வேளையில் ஏரிக்கரையோரத்துப் பசும்புல் தரையில் ஆங்காங்கு ஆடவரும் பெண்டிரும் கும்பல் கும்பலாகக் காணப்பட்டனர்.

சிலர் ஏகாந்தமாகப் புல் தரையில் சாய்ந்து கொண்டு பகற்கனவு கண்டு கவிதை புனைந்து கொண்டிருந்தனர்.

சிலர் கூட்டமாக உட்கார்ந்து காரசாரமான வாதப் பிரதிவாதங்கள் செய்து கொண்டிருந்தனர்.

வயது முதிர்ந்த தம்பதிகள் அங்கே அளவளாவிப் பேசி மகிழ்ந்தனர்.

இளமையின் இன்பத்தில் திளைத்த காதலர்களும் புது மணம் புரிந்த தம்பதிகளும் வாய்ப் பேச்சுக்கு அவசியத்தைக் காணாது கண்களோடு கண்களும் இதயத்தோடு இதயமும் பேசும்படி விட்டுக் களிப்படைந்தனர்.

**அ**தோ, அந்த இளம் தம்பதிகள் யார்? நமக்குத் தெரிந்தவர்களைப் போலத் தோன்றுகிறார்களே?—ஆம்; தெரிந்தவர்கள் தான். ஆனால் அதிகமாக நமக்கு அவர்களுடன் பரிச்சயம் கிடையாது. இரண்டொரு தடவை தான் சந்தித்திருக்கிறோம். ஆகையால் சற்று விலகி நின்று அவர்களுடைய சம்பாஷணையைக் கவனிப்போம்.

"இந்தக் கல்கத்தா ஏரிக்கரையின் அழகு திருச்செந்தூர்க் கடற்கரைக்குக் கூட வராது!" என்றாள் சித்ரா.

"உனக்கு இன்னமும் இந்த வங்க நாட்டு மோகம் விடவில்லை போலிருக்கிறது. எனக்கு இந்த ஏரிக்காட்சி இப்போதெல்லாம் அவ்வளவாக இன்பம் அளிக்கவில்லை. இதைப் பார்க்கும்போது துக்கந்தான் உண்டாகிறது. வங்க மாதா தன் அருமை மக்களின் பரிதாப நிலையை எண்ணிச் சொரிந்த கண்ணீர் இந்த ஏரியில் நிறைந்து ததும்புவதாக எனக்குத் தோன்றுகிறது" என்றான் அமரநாத்.

"ஒரு சமயம் இந்த ஏரியைப் பற்றி நீங்கள் வேறு விதமாக வர்ணித்தது எனக்கு நினைவிருக்கிறது. 'பங்கிம் சந்திரருடைய நாவல்களையும் ரவீந்திர

ரின் கவிதைகளையும் படித்துவிட்டு வங்கமாதா பொழிந்த ஆனந்தக் கண்ணீர் இந்த ஏரியில் நிறைந்து ததும்பிக் கொண்டிருக்கிறது!' என்று சொன்னீர்கள். அந்தப் பரவசமெல்லாம் இப்போது எங்கே போயிற்று?"

"அதையெல்லாம் இந்தப் பயங்கரமான பஞ்சம் அடித்துக் கொண்டு போய்விட்டது. மூன்று மாதமாகத் தினம் தினம் சாலையின் இரு பக்கங்களிலும் பட்டினியால் செத்துக் கிடப்பவர்களின் பிரேதங்களைப் பார்த்துக் கொண்டிருந்த பிறகு, கதையாவது கவிதையாவது காவியமாவது என்று தோன்றுகிறது. சுத்தப் பைத்தியக்காரத்தனம்! அதனாலேதான் காந்தி மகாத்மா சொன்னார்: 'மக்கள் பசியால் வாடும் நாட்டில் கலை என்ன, கவிதை என்ன, ஆடல் என்ன, பாடல் என்ன?' என்றார். 'இராட்டையின் ரீங்காரமே எனக்கு இன்னிசையிலும் இனிமையான சங்கீதம்!' என்றார். மகாத்மாவுக்கும் டாகூருக்கும் இதைப் பற்றி ஒரு சமயம் பலத்த விவாதம் நடந்தது. நான் அப்போது டாகூரின் கட்சிதான் சரியானதென்று எண்ணினேன். இந்த மூன்று மாதத்துப் பயங்கரங்களைப் பார்த்தபிறகு, பதினாயிரக்கணக்கான ஜனங்கள் பசிக்குச் சோறின்றித் தெரு வீதிகளில் விழுந்து செத்து மடிவதைப் பார்த்த பிறகு, மகாத்மா சொல்வதுதான் சரியென்று எண்ணுகிறேன்."

"இந்த வங்கநாட்டு ஜனங்கள் இவ்வளவு தேசபக்தியும் கடவுள் பக்தியும் உள்ளவர்களாயிற்றே! கடவுள் எதற்காக இவர்களை இப்படிச் சோதிக்கிறாரோ, தெரியவில்லையே!" என்று சித்ரா பரிதபித்துக் கூறினாள்.

"வங்காளிகள் நல்லவர்கள்தான்! ஆனால் இவர்களிடம் பெரிய துர்க்குணம் ஒன்றும் இருக்கிறது. குறுகிய மாகாணப் பற்று அதிகம் உள்ளவர்கள். இவர்களுக்கு வங்காளிகள் தேவ ஜாதிகள்; மற்ற நாட்டார் எல்லாரும் நீச்ச ஜாதிகள். மதராஸியையோ பம்பாய்க்காரனையோ கண்டால் இவர்களுக்குப் பிடிப்பதில்லை. இவர்கள் மட்டும் லாகூர் வரைக்கும் சென்று உத்தியோகம் பார்ப்பார்கள். ஆனால் மற்ற மாகாணத்தார் இங்கே வந்து பிழைப்பது இவர்களுக்குப் பிடிப்பதில்லை. அந்தக் கெட்ட குணத்துக்காகத்தான் கடவுள் இவர்களை இப்படித் தண்டித்திருக்கிறார்!" என்று சொன்னான் அமரநாத்.

"கடவுளை அவ்வளவு கொடுமையானவராக ஆக்கி விடுகிறீர்களே? கிருஷ்ண சைதன்யரும் ராமகிருஷ்ண பரமஹம்ஸரும் விவேகானந்தரும் அவதரித்த நாட்டின் மக்களைக் கடவுள் அவ்வளவு கருணையில்லாமல் தண்டிப்பாரா? சுரேந்திரநாதரும் தேசபந்துவும் சுபாஷ் போஸும் பிறந்த நாட்டின் மக்கள் கொஞ்சம் மாகாணப் பற்று உள்ளவர்களாயிருந்தால்தான் என்ன? அதற்காக அவர்களைப் பகவான் இவ்வளவு கொடூரமாகத் தண்டிப்பாரா? ஒரு நாளும் இல்லை!"

"பின்னே, நீ என்ன காரணம் சொல்லுகிறாய்? வங்காளிகள் எதற்காக இவ்வளவு பயங்கரமான கஷ்டத்துக்கு உள்ளாகவேண்டும்?"

"எல்லாம் மனிதர்கள் செய்கிற காரியந்தான். பணத்தாசை பிடித்த பேய்கள் விளைந்த தானியத்தையெல்லாம் வாங்கி முடக்கி விட்டால் பஞ்சம் வராமல் என்ன பண்ணும்?"

"அந்தக் கொடிய மனிதர்களையும் கடவுள்தானே சிருஷ்டித்தார்? 'எல்லா உயிர்களிலும் இறைவன் இருக்கிறார்' என்று நம்முடைய வேத சாஸ்திர புராணங்கள் எல்லாம் சொல்லுகின்றனவே! ஆகையால் மனிதன் செய்தாலும் அதன் பொறுப்பு கடவுளின் தலையிலேதானே விழும்?"

"உங்களோடு விவாதம் செய்ய என்னால் முடியாது. நீங்கள் இந்தக் கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்து இப்படி நாஸ்திகராகப் போய் விட்டீர்கள்! நான் உங்களோடு பேசத் தயாராயில்லை!" என்றாள் சித்ரா.

"போகட்டும்; கம்யூனிஸ்டுகளினால் இந்த ஒரு நன்மையாவது நிச்சயம் இருக்கிறது. அவர்களுடைய சகவாசத்தினால் ஒரு பெண்மணியின் வாயை மூடி மௌனமாகச் செய்ய என்னால் முடிந்ததல்லவா?" என்று கேலி செய்தான் அமரநாத்.

"வீண் ஆசை! அந்த மாதிரி என்னை நீங்கள் கர்வங்கொள்ள வேண்டாம். வங்க நாட்டுக்கு இந்தக் கொடு



பஞ்சத்தை அனுப்பியவர் கடவுளாக இருந்தால் அதனாலும் ஏதோ ஒரு நன்மை ஏற்படும் என்பது நிச்சயம். இந்த வங்காளத்தில் பஞ்சம் வருவது இது முதல் தடவையல்ல. முன்னேயும் வந்திருக்கிறது. 'ஆனந்த மடம்' கதையில் வங்கநாட்டில் அப்போது பரவியிருந்த பயங்கரமான பஞ்சத்தைப் பற்றிப் பங்கிம்சந்திரர் எப்படி வர்ணித்திருக்கிறார் என்று ஞாபகம் இருக்கிறதா? அந்தப் பஞ்சத்தின் காரணமாக ஒரு பெரும் புரட்சி தோன்றியது. மகேந்திரன், கல்யாணி, ஜீவானந்தன், சாந்தி, பவானந்தன், ஸத்தியானந்தர் முதலிய சுதந்திர வீரர்கள் உதயமானார்கள். 'வந்தேமாதரம்' என்னும் மகா மந்திரமும் ஏற்பட்டது. இப்போது இந்தப் பஞ்சத்தின் காரணமாகவும் ஒரு பெரும் புரட்சி ஏற்படப் போகிறது. குமுறிக் கொண்டிருக்கும் எரிமலை வெடிக்கப் போகிறது. அந்த எரிமலை பொழியும் நெருப்பில் பிரிட்டிஷ் ஆட்சி எரிந்து பொசுங்கி விடப் போகிறது. இந்தியா தேசம் சுதந்திரம் அடையப் போகிறது.''

" இந்தியா சுதந்திரம் அடையட்டும், நான் வேண்டாம் என்று சொல்லவில்லை; குறுக்கே நின்று தடுக்கவும் இல்லை. ஆனால் எனக்கென்னமோ சந்தேகந்தான். பஞ்சத்தில் அடிபட்ட ஜனங்கள் புரட்சி செய்வார்கள் என்று எனக்குத் தோன்றவில்லை. பசியினாலும் பஞ்சத்தினாலும் பிரஞ்சுப் புரட்சி ஏற்பட்டது என்று சொல்லுகிறார்கள். ஒருவேளை அரை வயிறு பட்டினியா யிருப்பவர்கள் புரட்சி செய்யலாம். முழுதும் பட்டினி கிடப்பவர்கள் அடியோடு சக்தியை இழந்து சோர்ந்து விடுகிறார்கள்; அல்லது செத்தே போய்விடுகிறார்கள். செத்துப் போனவர்கள் எப்படிப் புரட்சி செய்ய முடியும்? நீயே பார், சித்ரா! இந்த வங்காளப் பஞ்சத்தில் ஐம்பது லட்சம் பேர் செத்துப் போயிருக்கிறார்கள். இவர்களில் கால் வாசிப் பேர், ஒரு பத்து லட்சம் பேர், சுதந்திரத்துக்



காக உயிரை விடத் துணிந்திருந்தால் இந்தியா சுதந்திரம் பெற்றிருக்கும். அவ்வளவு கூட வேண்டாம். ஒரு லட்சம் பேர் உயிரை விடத் துணிந்து கிளம்பியிருந்தாலே போதும். ஆனால் வீதி ஓரங்களில் விழுந்து செத்தாலும் சாவார்களே யன்றி நாட்டின் விடுதலைக்காக உயிரைக் கொடுக்க முன் வர மாட்டார்கள்......"

"ஏன் வர மாட்டார்கள்? பேஷாக முன்வருவார்கள். ஜனங்களை நடத்திச் செல்லத் தகுந்த தலைவர்கள் இல்லாத தோஷந்தான். சுபாஷ் பாபு மட்டும் இச்சமயம் இங்கே யிருந்தால் கட்டாயம் புரட்சி ஏற்பட்டிருக்கும். சுபாஷ் பாபு இப்போது மலாய் நாட்டில் சேர்த்து வரும் சைனியத்தில் இந்திய வீரர்கள் ஏராளமாய்ச் சேருகிறார்களோ, இல்லையோ! உயிரைக் கொடுக்கத் துணிந்துதானே அவர்கள் சேருகிறார்கள்? ஆகா! தலைவர் என்றால் சுபாஷ் பாபுவைப் போல் இருக்க வேண்டும்."

"சுபாஷ் பாபுவின் பேரில் உன்னுடைய மோகம் இன்னும் போகவில்லை. சுபாஷ் பாபு வெற்றியடைந்தால் என்ன நடக்கும் தெரியுமா? இந்தியாவில் இங்கிலீஷ்காரர்களின் ஆட்சிக்குப் பதிலாக வங்காளிகளின் ஆட்சி ஏற்படும்!" என்றான் அமரநாத்.

"ஏற்பட்டால்தான் என்ன? அன்னியர்களாகிய இங்கிலீஷ்காரர்களின் கீழ் அடிமைகளாயிருப்பதைக் காட்டிலும் வங்காளிகளின் ஆட்சியில் நாம் இருந்தால் என்ன?"

"இருந்தால் என்ன? ஒன்றுமில்லை. விஷயம் என்ன வென்று உனக்குச் சொன்னேன். அவ்வளவுதான். பங்கிம் சந்திர சட்டர்ஜிதான் ஆனந்த மடம் எழுதியிருக்கிறாரே? அதில் யாரைத் தூக்கிவைத்து எழுதியிருக்கிறார்? வங்க மாதாவின் புதல்வர்களைத்தான்! 'வந்தேமாதரம்' கீதத்தில் ஏழு கோடி மக்கள் என்றுதான் சொல்லியிருக்கிறார். அதை முப்பது கோடி என்று பின்னால் மாற்றினார்கள். எப்படியும் வங்காளிகளிடம் இந்த துர்க்குணம் இருக்கத்தான் இருக்கிறது. அதன் பலனைப் பார், சித்ரா! வங்காளம் இப்போது முஸ்லிம் லீக் மந்திரிகளின் ஆட்சியில் இருக்கிறது. முஸ்லிம் லீகர்களும் வங்காளிகள் தான்! ஆனால் எப்பேர்ப்பட்ட வங்காளிகள்?"

"டாக்டர் டாகூரும் வங்காளிதான். அவரைப் பாருங்களேன்! உலகமெல்லாம் ஒன்று, மனித ஜாதியெல்லாம் ஒரே ஜாதி என்று சொல்லவில்லையா?"

"டாக்டர் டாகூர் அப்படிச் சொன்னார்; உண்மைதான். ஆனால் அவர் ஸ்தாபித்திருக்கும் சாந்திநிகேதனத்தைப் போய்ப் பார்! அங்கே 100க்கு 90 பேர் வங்காளிகள்!"

"அதிலே என்ன அதிசயம்? தமிழ் நாட்டில் ஒரு ஸ்தாபனம் ஆரம்பித்தால் அதில் தமிழர்கள்தானே இருப்பார்கள்? நீங்கள் வங்காளிகளைப் பற்றி ஓயாமல் குறை சொல்வது எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. அதுவும் இந்த நாட்டில் நாம் இருந்து தொழில் நடத்திப் பணம் சம்பாதித்துக் கொண்டே இந்த நாட்டு

மக்களைப் பற்றிக் குறை சொல்லலாமா? போதும், புறப்படலாம்! ஹாவ்ராவுக்குப் போகவேண்டும் என்றீர்களே!'' — இவ்வாறு சொல்லிக் கொண்டே சித்ரா எழுந்தாள்.

"நான் இங்கே அதிக நாள் இருப்பதாக உத்தேசமில்லை, சித்ரா! சீக்கிரம் தமிழ் நாட்டுக்குப் போய்விட விரும்புகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு அமரநாத்தும் எழுந்தான்.

"அதெல்லாம் முடியாது! நீங்கள் போவதாயிருந்தால் தனியாகப் போக வேண்டியதுதான். உங்கள் நாட்டில் குடி கொண்டிருக்கும் சிறுமைப் புத்தியும் சின்னச் செயல்களும் எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஒருவரையொருவர் நிந்திப்பதே தமிழ் நாட்டாருக்கு வேலை. ஒரு ஸ்திரீயும் புருஷனும் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் போதும். உடனே நூறு சந்தேகங்களைக் கற்பித்து அவதூறு பேச ஆரம்பித்து விடுவார்கள்!''

"வங்காளிகளிடம் இந்தக் குணம் இடையாது என்று நினைக்கிறாய் சித்ரா! உனக்குத் தெரிந்த இலட்சணம் அவ்வளவுதான்!'' என்றான் அமரநாத்.

"எனக்குத் தெரிந்திருக்கிற அளவே போதும். பிறத்தியாரிடம் என்ன துர்க்குணம் இருக்கிறது என்று நோண்டிப் பார்த்துத் தெரிந்து கொள்ள எனக்குக் கொஞ்சமும் விருப்பமில்லை!'' என்றாள் சித்ரா.

இவ்வாறு முடிவில்லாத விவாதம் செய்துகொண்டே அந்த அன்யோன்ய தம்பதிகள் மோட்டார் வண்டி நிறுத்தியிருந்த இடத்துக்குச் சென்று வண்டியில் ஏறிக்கொண்டார்கள்.

அமரநாத்தும் சித்ராவும் கல்கத்தாவில் ஜானிகஞ்ச் என்னும் பகுதியில் ஒரு அழகான பங்களாவில் வசித்தார்கள். முன்னேயெல்லாம் அவர்கள் அடிக்கடி ஏரிக்கரைக்குக் காற்று வாங்க வருவதுண்டு. பஞ்சத்தில் அடிபட்ட ஜனங்கள் கல்கத்தாவிற்கு வரத் தொடங்கிய நாளிலிருந்து அவர்கள் அதிகமாக வெளிக் கிளம்பவில்லை. தெருக்களில் பஞ்சத்தில் அடிபட்டுச் செத்துக் கிடந்தவர்களின் பிரேதங்களைப் பார்த்துக் கொண்டு போக அவர்களுக்குச் சகிக்கவில்லை. அதோடு பஞ்ச நிவாரண வேலையில் ஈடுபட்டிருந்த தென்னிந்தியர்களின் ஸ்தாபனம் ஒன்றில் சேர்ந்து சித்ராவும் தொண்டு செய்துகொண்டிருந்தாள். பர்மாவிலிருந்து வந்த அகதி ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்கும் உதவி புரிவதற்கென்று அந்த ஸ்தாபனம் முதலில் ஏற்பட்டது. அவ் வேலை ஒருவாறு முடிந்ததும் பஞ்சம் வந்துவிட்டது. பஞ்சத்தில் அடிபட்டு மெலிந்தும் குற்றுயிராகவும் வந்த அநாதை ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்கும் அந்த ஸ்தாபனம் தொண்டு செய்து வந்தது.

இப்போது சில நாளாக அப் பஞ்ச நிவாரண வேலை குறைந்திருந்தபடியால் மூன்று மாதத்திற்குப் பிறகு அமரநாத்தும் சித்ராவும் கொஞ்சம் ஏரிக் காற்று வாங்கிவிட்டு ஹாவ்ரா நண்பர்களையும் பார்த்துவரலாம் என்று புறப்பட்டிருந்தார்கள். ஹாவ்ரா ஸ்டேஷனுக்குக் கொஞ்ச தூரத்துக் கருகில் பெரிய வியாபாரக் கம்பெனிகள் தொழில் நடத்திய வீதிகள் இருந்தன. அந்த விசாலமான வீதிகளில் நெருங்கியிருந்த ஜனக் கூட்டத்தையும் மோட்டார் முதலிய வாகனங்களின் நெருக்கத்தையும் சொல்ல முடியாது. மாலை நேரங்களில் நிமிஷத்துக்கு ஒரு கஜ தூரம் வீதம் ஊர்ந்து கொண்டுதான் மோட்டார் செல்ல வேண்டும்.

"பஞ்சத்தில் அத்தனை லட்சம் பேர் செத்துப் போனார்கள், இத்தனை லட்சம் பேர் செத்துப் போனார்கள் என்று சொல்லுகிறார்களே! அவ்வளவு பேர் செத்துப்போன பிற்பாடும் இங்கே இத்தனை கூட்டமாக இருக்கிறதே?'' என்றான் அமரநாத்.

"இருந்துவிட்டுப் போகட்டும்; நீங்கள் யார் பேரிலாவது வண்டியை ஏற்றி ஜனத் தொகையைக் குறைக்கும் கைங்கரியத்தைச் செய்யவேண்டாம்!'' என்றாள் சித்ரா.

"இந்த வீதியில் யார் பேரிலாவது வண்டியை ஏற்றினால் அவன் அநேகமாக அரிசியை முடக்கிய கறுப்பு மார்க்கெட் முதலாளியாக இருப்பான். அவனைக் கொன்றால் தேசத்துக்குப் பெரிய சேவை செய்தவனாவேன்!'' என்று சொன்னான் அமரநாத்.

இருபத்துநாலாம் அத்தியாயம்

# வெடித்த எரிமலை

மாலைப்பொழுது இரவாக மாறிக் கொண்டிருந்தது. சாலை ஓரத்துக் கம்பங்களில் தீபங்கள் ஏற்றப்பட்டன. ஆனால் விளக்குகள் எல்லாவற்றுக்கும் ஏ. ஆர். பி. கூண்டுகள் போட்டிருந்தபடியால் தீபங்கள் பிரகாசமாக எரியவில்லை.

"இந்த ஜப்பான் யுத்தம் வந்தாலும் வந்தது: கல்கத்தாவின் சோபையே போய்விட்டது! முன்னேயெல்லாம் இந்த இடத்தில் எப்படிப் பிரகாசமான விளக்குப் போட்டு ஜகஜ்ஜோதியாக இருக்கும்!" என்றாள் சித்ரா.

இப்படி அவள் சொல்லி வாயை மூடினாளோ இல்லையோ, எட்டுத் திக்கும் கிடுகிடுக்கும்படியாகப் படார், படார் என்று சத்தம் கேட்டது. உடனே ஏ. ஆர். பி. ஸைரன் உடம்பு சிலிர்க்கும்படியான சோக சத்தத்துடன் ஊளையிடத் தொடங்கியது. ஜப்பான் விமானம் வந்து குண்டு போடுகிறதென்றும், ஏ. ஆர். பி. ஸைரன் முன் எச்சரிக்கை செய்வதற்குப் பதிலாக பின் எச்சரிக்கை செய்கிறதென்றும் அமரநாத்தும் சித்ராவும் தெரிந்து கொண்டார்கள். இது அவர்களுக்குப் புதிய அநுபவமாதலால் அவர்களுடைய உடம்பு நடுங்கிற்று. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. சித்ரா அமரநாத்தின் தோள்களைப் பிடித்துக் கொண்டாள். அமரநாத் சாலையோரத்தில் வண்டியை நிறுத்தினான். வீதியில் எள் விழ இடமில்லாதபடி நெருங்கி நின்று கொண்டிருந்த ஜனங்கள் நாலாபுறமும் சிதறி ஓடி மறைந்தார்கள். வண்டிகள் மட்டும் அப்படி அப்படியே சாலை ஓரமாக நின்றுகொண்டிருந்தன.

குண்டுகளின் சத்தம் ஓய்ந்து ஐந்து நிமிஷம் ஆயிற்று. "சரி; இவ்வளவுதான் போலிருக்கிறது; இனிமேல் போகலாம்" என்ற எண்ணம் அவர்கள் மனதிலே தோன்றியது. அடுத்த கணத்தில்,—ஆகா! இது என்ன அதிசயமான வெளிச்சம்! ஆயிரம் கோடி சூரியன் பூமியை நோக்கி விரைந்து வருவது போன்ற வெளிச்சம்!—உடனே அந்த அதிசயமான வெளிச்சம் மங்குகிறது!—ஒரு பெரிய சத்தம்,—அண்டங்கள் வெடித்து விழுவது போன்ற பயங்கரமான சத்தம்,—கேட்கிறது. காது செவிடாகி விட்டதென்றே தோன்றுகிறது. மோட்டார் கிடுகிடுவென்று நடுங்குகிறது. மோட்டாரின் கண்ணாடிக் கதவுகள் சடசட வென்று விரிந்து உடைகின்றன. சுற்றுப்புறமெங்கும் மக்கள் ஓலமிடும் பயங்கரமான சத்தம் எழுகின்றது.

பயங்கரம் இத்துடன் முடிந்து போய்விடவில்லை. சற்றுத் தூரத்தில் ஒரு பெரும் புகைத் திரள் குப் குப் என்று கிளம்பிப் பரவி வானை மறைக்கிறது. புகைத் திரளுக்கு மத்தியிலிருந்து ஒரு செந்தீப் பிழம்பு வானை நோக்கி ஜ்வாலை விட்டுக் கொண்டு மேலே மேலே போய் வானத்தையே மூடிவிடும் போலத் தோன்றுகிறது.

இத்தனை நேரமும் அமரநாத்தைச் சித்ரா கெட்டியாகப் பிடித்துக் கொண்டபடியிருந்தாள். இப்போது வாயைத் திறந்து நடுநடுங்கிய மெல்லிய குரலில் "ஐயோ! இது என்ன? இவ்வளவு பெரிய நெருப்பு எங்கிருந்து கிளம்புகிறது?" என்றாள்.

"எனக்கும் இப்போதுதான் தெரிகிறது. டி. என். டி. வெடி மருந்துக் கிடங்கில் தீப் பிடித்திருக்க வேண்டும். அதுதான் இவ்வளவு பெரிய சத்தம் கேட்டது!" என்றான் அமரநாத்.

"உலகத்துக்கு ஏதோ கேடுகாலம் வந்துவிட்டது!" என்றாள் சித்ரா.

"உலகத்துக்குக் கேடுகாலம் முன்னமே வந்து விட்டது; இப்போதுதான் கல்கத்தாவுக்குக் கேடு வந்திருக்கிறது!" என்றான் அமரநாத்.

"நாம் சிவனே என்று மதராஸுக்குப் போய்விடலாம். கல்கத்தாவில் இத்தனை நாள் இருந்தது போதும்!" என்றாள் சித்ரா.

"முதலில் இன்று ராத்திரி வீடு போய்ச் சேரலாம். நாளைக்கு மதராஸுக்குப் போவது பற்றி யோசிக்கலாம்" என்றான் அமரநாத்.

"வண்டியைத் திருப்பி வீட்டுக்கு விடுங்கள்! ஹாவ்ராவுக்கு இன்றைக்கு வேண்டாம்!" என்றாள் சித்ரா.

"கொஞ்சம் என் கை நடுக்கம் நிற்கட்டும். அதற்காகத்தான் காத்துக்

கொண்டிருக்கிறேன். ஹாங்ராவுக்குப் போக நினைத்தாலும் இன்றைக்கு முடியாது!" என்றான் அமரநாத்.

அமரநாத் கூறியது உண்மை என்பதை எதிரிலே தோன்றிய காட்சிகளும் சுற்றுப்புறமெங்கும் கேட்ட சத்தங்களும் உறுதிப் படுத்தின.

முதலில் கிளம்பிய பெரும் நெருப்பு மேலும் மேலும் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது.

அதற்குச் சமீபத்தில் அங்குமிங்கும் இன்னும் சிற்சில சிறிய தீப்பிழம்புகள் தோன்றலாயின.

திரள் திரளாகக் கரிய புகை கிளம்பிச் சுழன்று பரவி வான வெளியையெல்லாம் மூடியது.

தீப்பிடித்த இடங்களை நோக்கி ஜனங்கள் பலர் பயங்கரமான ஊளைச் சத்தங்களை இட்டுக்கொண்டு விரைந்து ஓடினார்கள்.

நாலா பக்கங்களிலிருந்தும் டாண் டாண் டாண் என்று மிக்க வேகமாக மணி அடித்துக்கொண்டு நெருப்பு அணைக்கும் என்ஜின்கள் பறந்து ஓடி வந்து கொண்டிருந்தன.

சிறிது நேரம் ஆங்காங்கே ஸ்தம்பித்து நின்றுகொண்டிருந்த மோட்டார் வண்டிகள் திடீரென்று ஏக காலத்தில் புறப்பட யத்தனித்தபோது அவற்றின் ஹாரன்கள் எழுப்பிய சத்தங்கள் மகா கோரமாகக் காது செவிடுபடக் கேட்டன.

வானை மூடியிருந்த புகைத் திரள் காற்றின் வேகத்தினால் கொஞ்சம் விலகிக் கொடுத்துத் தீயின் வெளிச்சம் கட்டிடங்களின் மேலே விழும்படி செய்தபோது, வீதியின் இருபுறமும் இருந்த நாலு மெத்தை ஐந்து மெத்தைக் கட்டிடங்களின் மேல் தளத்தில் ஜனங்கள் நிழல் உருவங்களாக நின்று பார்த்துக்கொண்டிருந்த காட்சி ஏதோ ஒரு பயங்கரமான யமலோகக் காட்சியை நினைவூட்டியது.

சித்ரா அதையெல்லாம் பார்க்கச் சகியாமல் கண்களை மூடிக் கொண்டாள். பிறகு கேட்கச் சகியாமல் காதுகளைப் பொத்திக் கொண்டாள்.

"வண்டியைத் திருப்பி ஓட்டப் போகிறீர்களா, இல்லையா?" என்றாள்.

"ஆகட்டும்; ஓட்டுகிறேன்! நீயும் கொஞ்சம் ஜாக்கிரதையாக மூன்னாலும் பக்கங்களிலும் பார்த்துக் கொண்டு வா!" என்றான் அமரநாத்.

கார் திரும்பிப் புறப்பட்டு அந்த வீதியைத் தாண்டி அடுத்த வீதியில் நுழைந்தது. அங்கே கொஞ்ச தூரத்துக்கு அப்பால் ஒரு பெரிய ஜனக் கூட்டம். அருகில் நெருங்கிப் பார்த்தபோது ஒரு மார்வாரியின் கடைக்குள் ஜனங்கள் புகுந்து கிடைத்த சாமான்களைச் சுருட்டிக்கொண்டு ஓடுவதாகத் தெரியவந்தது.

கூட்டத்தின் மத்தியில் சில போலீஸ்காரர்களும் காணப்பட்டார்கள். ஜனங்கள் கடையில் புகுந்து சூறையாடுவதை அந்தப் போலீஸ்காரர்கள் பார்த்துக்கொண்டு நின்றார்கள்!

ஜனக் கூட்டத்தின் ஓரம் வரையில் அமரநாத் காரைக் கொண்டு வந்துவிட்டுப் பிறகு சிறிது தயங்கினான். மறுபடியும் காரைத் திருப்பிவிடலாமா என்று நினைத்தான். திரும்பிப் போவதற்கு வேறு நல்ல வழி கிடையாது. ரொம்பவும் சுற்றி அலைய வேண்டும்.

மேலும் இந்தக் காலிக் கூட்டத்துக்குப் பயந்து திரும்பிப் போவதா?— வீதி ஓரமாகக் கூட்டத்திற்குள்ளே அமரநாத் காரை விட்டான். கூட்டத்தில் சிலர் காரின் மேல் தட்டைத் தட்டினார்கள். சிலர் கதவைத் தட்டினார்கள். சிலர் பின்னால் நின்று வண்டியைப் பிடித்து இழுத்து நிறுத்தப் பார்த்தார்கள். சிலர் 'ஆய் ஊய்' என்று கத்தினார்கள். 'மாரோ! மாரோ!' என்று ஒரு குரல் எங்கிருந்தோ கேட்டது.

அமரநாத் கதிகலக்கத்துடன்தான் வண்டியை ஓட்டினான். நல்ல வேளையாக அபாயம் ஒன்றும் நேரவில்லை. கூட்டத்தைத் தாண்டியதும் வேகமாக வண்டியை விட்டான்.

"சித்ரா! பார்த்தாயல்லவா இலட்சணத்தை! எங்கேயோ குண்டு வெடித்தது! எங்கேயோ தீப்பிடித்தது! இங்கே கடையிலே புகுந்து காலிகள் கொள்ளையடிக்கிறார்கள்! போலீஸ்காரர்கள் பார்த்துக்கொண்டு நிற்கிறார்கள்! இந்த இலட்சணத்தில் இந்தியாவுக்குச் சுயராஜ்யம் வேண்டு

மாம், சுயராஜ்யம்! உருப்பட்டாற் போலத்தான்!" என்றான் அமரநாத்.

இப்படி அமரநாத் சொல்லிக்கொண்டிருக்கும்போது காரின்மேல் ஒரு கல் வந்து விழுந்தது. ஓடும் வண்டியில் விழுந்தபடியால் வெடிகுண்டு வெடித்ததுபோலச் சத்தம் கேட்டது.

"நான் சொன்னது சரியாகப் போய்விட்டதல்லவா? என்ன மோசமான நிலைமை, பார்! இந்தக் கல் என் பேரிலோ எதிர்க் கண்ணாடியின் பேரிலோ விழுந்திருந்தால் என்ன கதி ஆகியிருக்கும்?" என்றான் அமரநாத்.

"நான்தான் சொல்லிவிட்டேனே? இந்தக் கல்கத்தாவிலே இருந்ததும் போதும்; சம்பாதித்ததும் போதும். நாளைக்கே ஊருக்குப் புறப்படலாம். உள்ளதைக் கொண்டு திருப்தியுடன் நிம்மதியா யிருக்கலாம்."

"ஊருக்குப் போனால் நிம்மதி வந்து விடுமா? அங்கேயும் இந்த மாதிரியான ஜனங்கள் தானே இருப்பார்கள்? இங்கே செய்வதைப்போல அங்கேயும் செய்யமாட்டார்களா?"

"நம் பக்கத்து ஜனங்கள் ஒருநாளும் இந்த மாதிரி மிருகப்பிராயமாக நடந்து கொள்ள மாட்டார்கள்!" என்று தீர்மானமாகக் கூறினாள் சித்ரா.

கொஞ்ச தூரம் போனதும் ஒரு மோட்டார் பஸ் சாலை ஓரத்தில் பக்க வாட்டில் விழுந்து தீப்பிடித்து எரிந்து கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

"பஸ்ஸில் எப்படித் தீப்பிடித்திருக்கும்?" என்றாள் சித்ரா.

"தானாகப் பிடித்திராது! யாரோ காலிகள் தீ வைத்திருக்கிறார்கள்!" என்றான் அமரநாத்.

"எதற்காக?"

"எதற்காக என்றுகேட்டால் என்ன சொல்லுவது? காலிகளுடைய காரியங்களுக்குக் காரணம் சொல்ல முடியுமா? கொள்ளை, கொலை, தீ வைத்தல் ஆகிய காரியங்களிலேயே அவர்களுக்கு ஆனந்தம். நிஷ்காம்ய கர்மமாகவே செய்வார்கள்!"

வண்டி இன்னும் கொஞ்ச தூரம் சென்றதும் சாலை ஓரத்தில் ஓர் உருவம் விழுந்து கிடப்பது தெரிந்தது. அது

பெண் உருவமாகவும் காணப்பட்டது. அதன் பக்கத்தில் ஒரு பையன் குனிந்து நின்று கொண்டிருந்தான்.

"நிறுத்துங்கள்! வண்டியை நிறுத்துங்கள்!" என்று சித்ரா கூவினாள்.

வண்டி நின்றது. அதைப் பார்த்ததும் பெண் உருவத்தின் பக்கத்தில் நின்ற பையன் விழுந்தடித்து ஓடினான்.

"அந்தப் பையன் என்ன செய்து கொண்டிருந்தான்?" என்று சித்ரா கேட்டாள்.

"கையிலிருந்த வளையலைக் கழற்றிக் கொண்டிருந்தான். நம்மைப் பார்த்ததும் ஓடினான்! சித்ரா! கொஞ்ச நாளாகக் கல்கத்தா சாலைகளில் பிரேதங்களைக் காண்பதில்லை யென்று குறைப்பட்டாயல்லவா? இதோ உன் குறை தீர்ந்துவிட்டது!"

"ஏதாவது கன்னா பின்னாவென்று சொல்லாதீர்கள்! நான் பிரேதத்தைக் காணவில்லை யென்று குறைப்பட்டேனுக்கும்! ஒருவேளை இன்னும் உயிர் இருக்கிறதோ, என்னமோ? இறங்கிப் பார்க்கலாம், வாருங்கள்!"

இருவரும் இறங்கி அந்த உருவத்தின் அருகில் போனார்கள்.

"அடாடா! நம்முடைய மதராஸ் பக்கத்துப் பெண் போல அல்லவா இருக்கிறது? வயதும் அதிகமிராது; சிறு பெண்!" என்றாள் சித்ரா.

"மதராஸ் பக்கத்துப் பெண் என்பதற்காக யமன் விட்டுவிடுவானா, என்ன? பார்த்தாகி விட்டது! வா, போகலாம்!" என்றான் அமரநாத்.

"செத்துப் போய்விட்டதாக அவ்வளவு நிச்சயமாய் ஏன் சொல்ல வேண்டும்? உயிர் இருக்கிறதா என்று பாருங்கள்!"

"நீயே பார்! உனக்குத்தான் இந்த மாதிரி காரியங்களில் அநுபவம் அதிகம்!" என்றான் அமரநாத்.

கீழே கிடந்த பெண்ணின் மூக்கின் அருகே சித்ரா விரலை வைத்துப் பார்த்தாள். மூச்சு இலேசாக வந்துகொண்டிருந்தது. மார்பில் கை வைத்துப் பார்த்தாள். மார்பு அடித்துக்கொண்டது என்பதும் நன்கு தெரிந்தது.

"நிச்சயமாக உயிர் இருக்கிறது! சீக்கிரம் பிடியுங்கள்!" என்று சொல்லிச் சித்ரா அந்தப் பிரக்ஞையற்ற பெண்ணின் தலையின் கீழ்க் கையைக் கொடுத்துத் தூக்கினாள்.

"ஏன் மரம் மாதிரி நிற்கிறீர்கள்! சீக்கிரம் காலின் பக்கம் பிடித்துத் தூக்குங்கள்!" என்றாள்.

"யாரோ ஒரு தெருவில் கிடக்கிற மூதேவிக்காக நான் 'மரம்' என்று வசவு வாங்கவேண்டியிருக்கிறது! அவளுடைய காலையும் நான் பிடித்துத் தொலைக்க வேண்டியிருக்கிறது!" என்று சொல்லிக்கொண்டே அமரநாத் அந்தப் பெண்ணின் காலைப் பிடித்துத் தூக்கினான். இருவருமாகக் கொண்டு வந்து காரின் பின் ஸீட்டில் போட்டார்கள்.

"விடுங்கள்! சீக்கிரம் காரை விடுங்கள்! ஒரு உயிரைக் காப்பாற்றுங்கள்!" என்றாள் சித்ரா.

வண்டி கிளம்பிப் போகத் தொடங்கியதும், "எங்கே விடுகிறது! காரை எங்கே விடுகிறது?" என்று அமரநாத் கேட்டான்.

"வீட்டுக்குத்தான் விடவேண்டும்! வேறு எங்கே?"

"அப்படியானால் நான் வண்டியை நிறுத்தி வெளியில் எடுத்து எறிந்து விடுவேன். வீட்டுக்குக் கொண்டு போகவே கூடாது. யாரோ? என்ன சங்கடமோ? நம் வீட்டில் செத்து வைத்தால் என்ன செய்கிறது?"

"உங்களைப் போல் இரக்கமற்ற மனிதரை நான் பார்த்ததே கிடையாது. அப்படியானால், அநாதை விடுதிக்கே விடுங்கள்! சீக்கிரம் போனால் சரி!" என்றாள் சித்ரா.

உண்மையில் அமரநாத் அவ்வளவு கருணையற்றவன் அல்ல. ஆகையால் அதி வேகமாகக் காரை விட்டுக் கொண்டு சென்றான். பிரக்ஞையற்றுக் கிடந்த பெண்ணின் முகத்தில் வேகமாகக் காற்றுப் பட்டதினாலேயே அவளுக்கு மீண்டும் உயிரும் உணர்வும் வரத் தொடங்கின. அநாதை ஆசிரமத்திற்குக் கொண்டு போய்ச் சிறிது நேரம் ஆரம்ப சிகிச்சை செய்ததும் நன்றாக உயிர் வந்துவிட்டது. இனி அபாயம் இல்லை யென்று தெரிந்து கொண்டு அமரநாத்தும் சித்ராவும் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

# வட்ட மேஜை



## ★ ஊழல் மிக்க கோயில் நிர்வாகம்

சென்னை சர்க்கார் இப்போது கொண்டு வந்துள்ள ஹிந்துமத தர்ம ஸ்தாபன பரிபாலன மசோதாவை நான் ஆதரிக்கிறேன். அதற்கு ஆதாரமாக என்னுடைய அநுபவங்கள் சிலவற்றைக் கூற விரும்புகிறேன்.

கொஞ்ச காலத்திற்கு முன் தர்ம ஸ்தாபன போர்டினால் நியமிக்கப்பட்ட ஆடிட்டர் ஒருவரின் பிரதிநிதியாகத் தென் மலையாளத்தில் கணக்குப் பரிசோதனை நிமித்தம் பல கோயில்களுக்கு க்ஷேத்ராடனம் செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. ஒரு சில இடங்களைத் தவிர மற்றவைகளில் ஊழல்கள் மலிந்துதான் கிடந்தன. அநேகர் கணக்குகளைக் கொண்டு வரவே மாட்டார்கள். சாலையோரத்தில் பஸ்ஸிலிருந்து இறங்கி, அங்கிருந்து பல மைல் தூரம், வயல் வெளிகள், காடுகள், மலைகள் முதலியவற்றைக் கால் நடையாகக் கடந்து சென்று, வண்டிகள் செல்ல முடியாத இடங்களிலுள்ள இந்தக் கோயில்களை அடைந்தால் கோயில்களில் வௌவாலும் துரிஞ்சலும்தான் வரவேற்பளிக்கும். தர்மகர்த்தா அல்லது காரியஸ்தரின் வீட்டை விசாரித்துக் கொண்டு சென்றால், 'அவர் வெளியூருக்குப் போயிருக்கிறார். எப்போது வருவாரென்று தெரியாது' என்று பதில் வரும். அப்படிப் பதில் சொல்லுகிற ஆசாமியே ஒருவேளை அந்தக் கோயிலின் தர்மகர்த்தாவாக இருக்கக் கூடுமோ என்று சந்தேகம் தோன்றும். அந்தப் பிராந்தியங்களில் இதை விசாரித்தறிவதும் சிரமம். சிலருடைய கணக்குகள் எப்போதும் 'கோடதியில்' (கோர்ட்டில்) இருக்கும். சிலர் 'கணக்குகளே வைக்கிற வழக்கமில்லை' என்று கை விரித்துவிடுவர். இவர்களைத் தவிர சிலர் யோக்கியமாகக் கணக்குப் புத்தகங்களைக் காண்பிப்பார்கள். அவற்றில் பாதிக்குமேல் 'ஜோடித்த'வைகளோ என்று சந்தேகிக்கும்படி இருக்கும்.

வள்ளுவ நாடு தாலுகாவில் ஒரு கோயிலுக்கு இரவு சுமார் ஏழு மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். கோயிலுக்கு அருகிலேயே தர்மகர்த்தாவின் வீடு. கோயில் குகைபோல் இருளடைந்து கிடந்தது. சிலந்திக் கூடுகளும் ஒட்டடையும் பக்ஷிகளின் எச்சமும் குப்பையும் நிரம்பித் துர்க்கந்தம் வீசி கோயிலுக்குள் மனிதன் எட்டிப் பார்த்து எத்தனை காலமாயிற்றோ என்று தோன்றும்படி இருந்தது. ஆனால் அந்தக் கோயிலின் கணக்குகளைப் பார்த்ததில் அன்றையத் தேதி வரையில் 'விளக்குக்கு எண்ணெய், பால் பாயஸ நைவேத்தியம், புஷ்பம் பழம் தூபதீபம்' என்று தான் தவறாமல் செலவு எழுதப்பட்டிருந்தது.

பாலக்காடு தாலுகாவில் ஒரு பெரிய பணக்கார நாயரின் பார்வையில் சுமாராக நல்ல அந்தஸ்துள்ள மூன்று கோயில்கள் இருந்தன. அவர் ஒவ்வொரு வருஷமும் வருஷ முடிவில் கோயில் கணக்குப்படி கையிருப்பில் உள்ள பெருந் தொகைகளான நெல், ரொக்கம் இவற்றைத் தமது சொந்த 'எஸ்டேட்' கணக்கிற்குப் பற்றெழுதித் தாக்கல் செய்து கொண்டிருந்தார். "இது பற்றி உமது ரிபோர்ட்டில் அநாவசியமாக ஏதாவது எழுதப்போகிறீர், ஜாக்கிரதை!" என்று மரியாதையாக எச்சரித்தார் அவரது காரியஸ்தர். எனினும் போர்டுக்கு இது விஷயமாக ரிபோர்ட் சமர்ப்பிக்கத் தான் செய்தோம்.

வள்ளுவ நாட்டில் இன்னொரு இடத்தில் ஒரு சிறிய கோயில், வருமானம் மிகக் குறைவு. டிரஸ்டி பெரிய புள்ளி. 'பெரிய' இடத்துச் செல்வாக்குள்ளவர். கோயில் நிலபுலங்களைத் தமது உறவினர்கள் பேரில் மிகக் குறைந்த குத்தகைக்குச் சீட்டெழுதி அவரே அநுபவித்து வருவதாக வதந்தியாக இருந்தது. பெரும்பாலும் ஏழைகளும் பாமரர்களுமான உள்ளூர் வாசிகளுக்கு இதை வெளியில் மூச்சு விடவும் பயம். அந்தக் குறைந்த குத்தகைப்படி கோயில் வருமானம் வருடத்தில் முந்நூறு ரூபா வென்றால் அதற்குத் தமது சொந்தக்காரன் ஒருவனை மாதம் நாற்பது ரூபாய் சம்பளத்தில் காரியஸ்தனாக வைத்திருந்தார். வருகிற வருமானம் அந்த ஒருவரின் சம்பளத்துக்கே போதாது. இது தவிர நித்திய பூஜை, வருடாந்திர திருவிழா இத்தியாதி வகைகள் சேர்ந்து வருடச் செலவு சுமார் ஆயிரத்தைந் நூறு ரூபாயாகும். பற்றுக்குறைக்குத் தர்மகர்த்தாவானவர் கோயிலுக்குக் கடன் கொடுத்து இட்டு நிரப்புவார். இப்படி ஏழெட்டு வருடங்கள் செய்தால் கோயில் 'ஏழைக்' கோயிலிலிருந்து 'கடன்காரக்' கோயிலாகி, அந்தத் 'தர்மகர்த்தா' தமக்குச் சேர வேண்டிய கடனுக்கும் வட்டிக்குமாக கோயிலின் சொத்துக்களை ஸ்வீகரித்துக் கொண்டு விடுவாரோ என்று அஞ்சும்படி இருந்தது. இதைப் போர்டாருக்கு எடுத்துக் காட்டியதில், அவர்கள் 'ஆடிட்டர் தமது வரம்புக்குப் புறம்பான விஷயங்களில் தலையிட வேண்டாம்' என்று ஒரு வரி எழுதிவிட்டார்கள்.

இவை போன்ற உதாரணங்கள் எத்தனை வேண்டுமானாலும் கூறிக் கொண்டே போகலாம். ஒவ்வொரு ஜில்லாவிலும் இது போன்ற ஊழல்கள் எத்தனையோ இருக்கக் கூடும். இவ்வூழல்களை அறிந்த ஒவ்வொருவருக்கும் இம்மசோதாவின் முக்கியத்துவம் நன்கு விளங்கும். ஆனால் ஒழுங்கான முறையில் நிர்வாகம் செய்யப்படும் கோயில்களும் சில இருக்கத் தான் செய்கின்றன. சர்க்காரின் தர்ம ஸ்தாபன நிர்வாகம், சென்னை நகர பஸ் நிர்வாகத்



★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ 'ஊழல் மிக்க கோயில் நிர்வாகம்' என்ற கடிதம் எழுதிய மாம்பலம் ஸ்ரீ ஏ. கே. பட்டுசாமி அவர்களுக்கு அளிக்கப்பட்டது.

# வியாதி கடுமை !











தைப் பற்றிப் பத்திரிகைகளில் அடிபடும் விஷயத்தைப் போல் ஆகிவிடாமல், அந்தத் துறையில் அநுபவமுள்ளவர்களைக் கொண்டு நடத்தப்பட வேண்டும்.

நமது சர்க்கார் இவற்றைத் தவிர முக்கியமாய்க் கவனிக்க வேண்டியவை இன்னும் சில உள. ஒருவேளை பூஜைக்கும் வகையில்லாமல் எத்தனையோ 'விஷ்ணுக்களும்' 'சிவன்களும்' 'பிள்ளையார்களும்' கோயில்களில் தவம் செய்து கொண்டிருக்கின்றனர். அத்தகைய வருமானமற்ற கோயில்களுக்குப் பெருத்த வருமானமுள்ள கோயில்கள் அல்லது மடங்களின் நிதியிலிருந்தோ அல்லது பொது நிதியிலிருந்தோ வருஷவாரி மான்யம் கொடுத்து, அந்த 'ஏழை'க் கோயில்களையும் புதிய களை பெற்று விளங்கும்படி உத்தாரணம் செய்ய வேண்டும்.

இன்னும், ஏதோ ஒரு காலத்தில் மிகுந்த செலவில் அழகிய வேலைப்பாடுகளுடன் நிர்மாணிக்கப்பட்ட பல கோயில்கள் இப்போது கவனிப்பாரின்றி மூடப்பட்டு, மதிற் சுவர்கள் இடிந்து, கோபுரங்கள் கரைந்து, ஆலும் எருக்கும் முளைத்து மூடி, அவற்றின் அருமையான கலைப் பொக்கிஷங்கள் இருந்த இடம் தெரியாமல் சிறிது சிறிதாக சீரணமாகிக் கொண்டு வருகின்றன. சர்க்கார் இவற்றையும் கவனித்துச் செப்பனிட்டு ஜீர்ணோத்தாரணம் செய்தால் ஆஸ்திக மனப்பான்மையுடைய நமது மாகாணத்தவர்களின் பெரு மதிப்புக்குப் பாத்திரராவார்கள். இவ்விஷயத்தில் சர்க்காரின் புதை பொருள் ஆராய்ச்சி இலாகா (Archaeological Department) சிறந்த உதவி புரியக் கூடும்.

மாம்பலம்
20—2—49 ஏ. கே. பட்டுசாமி

## ஏன் இந்த எதிர்ப்பு ?

ஹிந்து மத தர்ம ஸ்தாபன மசோதாவைப்பற்றிச் சிலர் எதிரிடையாகப் பிரசாரம் செய்துவருகிறார்கள். ''கோயில் நிர்வாகத்தை சர்க்கார் ஊழியர்கள் கையில் கொடுத்தால் லஞ்சப் பழக்கங்கள் தாண்டவமாடும்'' என்று சொல்லுகிறார்கள். ஏன் இந்த சர்க்கார் ஊழியர்களைக் குறை கூற வேண்டும்? அவர்களின் உதவியினால்தான் சர்க்காரே நடக்கிறது! அவர்களும் பொது மக்களில் ஒரு கூட்டம்தான். கம்யூனிஸ்டுகள், சுயமரியாதைக்காரர்கள் நமது கோயிலில் நடக்கும் ஊழல்களைக் கேவலமாக ஏசிப் பேசுகிறார்கள். இம் மசோதாவினால் அவர்கள் வாய் அடைபட்டுப் போய்விடும். ஒரு சிறு சம்பவம் என் ஞாபகத்திற்கு வருகின்றது.

ஒரு பிரபல கோயிலில் வெள்ளிக்கிழமையன்று தீபாராதனை எட்டு மணிக்கு நடப்பது வழக்கம். பக்தர்கள் தரிசனத்திற்குக் காத்திருப்பார்கள். கோயில் டிரஸ்டி ஒரு வெள்ளிக்கிழமை சினிமா சென்றுவிட்டார். அவர் திரும்பி வரும்போது இரவு 9-30 மணி. அதற்குப் பிறகுதான் ஆராதனை நடந்தது.

இந்த ஊழல்கள் இனி நின்று போகும். மற்ற சர்க்கார் ஊழியர்கள்போல் கோயில் கைங்கரியக்காரர்களும் மாதச் சம்பளம் பெறுவார்கள். வேலைகளும் மணிப்பிரகாரம் நடக்கும். கடவுள் பிரசாதம் இனி ஒரு சிலருக்கு மாத்திரம் விநியோகம் செய்யப்பட மாட்டாது. கடவுளை எவ்வாறு வழிபட வேண்டும் என்று கட்டளையிடச் சட்டத்துக்கு உரிமை இடையாது. ஆனால் கடவுளின் சொத்தை எவ்வாறு நிர்வகிக்க வேண்டும் என்று சொல்லச் சட்டத்துக்கு உரிமை உண்டு.

பம்பாய்
16—2—49 ஆர். என். ராவ்

No. 4

# அசோகர் அளித்த பரிசு!

ரஜனி

கொழும்பு, பிப்ரவரி, 20.

**யா**ழ்ப்பாணத்திலுள்ள காங்கேசன் துறை என்னுமிடத்தில் சென்ற வாரம் கடைபெற்ற ஒரு பொதுக்கூட்டம் இலங்கை ராஜீய வட்டாரங்களில் விசேஷப் பரபரப்பை உண்டுபண்ணியிருக்கிறது. அந்தக் கூட்டத்தில் ஸ்ரீ எஸ். ஜே. வி. செல்வநாயகம், ஸ்ரீ வி. வன்னியசிங்கம், செனட்டர் இ. எம். வி. நாகநாதன் ஆகிய மூன்று பார்லிமெண்டு அங்கத்தினர்களும் பேசினார்கள். அவர்கள் சொல்லியது இதுதான்:

"ஒவ்வொரு விஷயத்திலும் தமிழர்களை ஒடுக்கி நசுக்கச் சிங்கள மந்திரிகள் இரகசியமாகவும் பகிரங்கமாகவும் வேலை செய்கிறார்கள். கொடிப் பிரச்னையில் கலந்து பேசி ஒரு முடிவு செய்வோம் என்று சொல்லிவிட்டு, சிங்கக் கொடியைப் படிப்படியாகத் தேசியக் கொடியாக்குகிறார்கள். பாஷைப் பிரச்னையில் சிங்களத்தையும் தமிழையும் தேசிய பாஷைகளாக்குவோம் என்று சொல்லி விட்டு, பார்லிமெண்டில் சிங்களத்தில் மட்டும் பேச அனுமதித்துத் தமிழில் பேசக்கூடாது என்கின்றனர். இது மாதிரி தமிழையும் தமிழர்களையும் கொஞ்சம் கொஞ்சமாக நசுக்குவதற்கான காரியங்களையே செய்து வருகிறார்கள்.

"இந்த நிலைமையில் தமிழர்களுக்குத் தனியரசு வேண்டுமென்று நாம் கேட்பதில் நியாயமிருக்கிறது. யாழ்ப்பாணத்தைத் தலை நகரமாகக் கொண்ட ஒரு தமிழர் ராஜ்யமும், அனுராதபுரத்தையோ அல்லது வேறு இடத்தையோ தலை நகரமாகக் கொண்ட ஒரு சிங்களவர் ராஜ்யமும் ஏற்பட்டு, இரண்டையும் இணைக்கும் யூனியன் சர்க்கார் தோன்ற வேண்டும். யூனியனுக்குக் கொழும்பு தலை நகரமாக இருக்க வேண்டும். இந்த இலட்சியம் பூர்த்தியடையும் வரை தமிழர்கள் போராடுவார்கள். சிங்களவர்களுடன் தமிழர்கள் ஒத்துழைக்கவும் கட்டுக் கொள்ளவும் தயார்; ஆனால் அடி பணியத் தயாரில்லை!"

மேற்படி மூன்று தமிழ்ப் பார்லிமெண்டு அங்கத்தினர்களும் இப்படிப் பேசினார்கள். இம் மூவரும் அகில இலங்கைத் தமிழ்க் காங்கிரஸைச் சேர்ந்தவர்கள். இந்தியர்களுக்கும் யாழ்ப்பாணத் தமிழர்களுக்குமிடையில் பிளவை உண்டுபண்ணுவது ஆபத்தென்று மதித்து, இந்தியர் பிரஜா உரிமை மசோதாவை எதிர்த்து வோட்டுக் கொடுத்துப் பொன்னம்பலம் கோஷ்டியிலிருந்து தனியாகப் பிரிந்தவர்கள்.

## புராதனத் தலைநகரம்

**சு**மார் 2,300 ஆண்டுகளுக்கு முன்னால் அசோகச் சக்கரவர்த்தி தமது குமாரன் மஹிந்தனைப் பௌத்த மதப் பிரசாரத்துக்காக இலங்கைக்கு அனுப்பினார். அப்பொழுது இலங்கையில் அரசு புரிந்த தேவனம்பியதீசன் என்ற மன்னன் மஹிந்தனை வரவேற்று, தானும் பௌத்தனாகித் தனது பிரஜைகளையும் பௌத்த மதத்தைத் தழுவச் செய்தான். சிங்களப் பெண்களையும் பிக்குணிகளாக்குவதற்காக அசோகர் தமது மகளையும் புனித போதி மரக் கன்றுடன் இலங்கைக்கு அனுப்




மன்மதன்:—என் பிரிய ரதியே! நான் பூலோகத்துக்குப் போகிறேன். உனக்கு ஏதாவது வாங்கிவர வேணுமா?

ரதி:—ஆமாம்; வாங்கிவர வேண்டியதுதான்! குட்டிக்கூரா பவுடர், கூடெக்ஸ், ஐடெக்ஸ், லிப்ஸ்டிக் எல்லாம் மறந்துவிடாமல் ஞாபகமாக வாங்கி வாருங்கள்.

பினார். அந்தப் போதிமரம் அனுராதபுரியில் இன்னும் வானளாவி நிற்கிறது.

திவனம்பியதீசன் காலத்திய கல்வெட்டுகளும் கோபுரங்களும், மற்றும் பல சிலா சாஸனங்களும் அடங்கிய பழைய அனுராத புரியைப் பாதுகாப்பதற்காக அதை வேலி யிட்டு ஒதுக்கிவிட்டு, ஜனங்கள் வசிப்பதற்காகப் புதிய அனுராதபுரம் என்ற பெயருடன் ஒரு புதிய ஊரைப் போன வாரம் பிரதமர் சேனநாயகா திறந்துவைத்தார். நகரவாசலில் 20 அடி உயரமுள்ள சிங்க ஸ்தம்பத்தைப் பிரதமர் திறந்து வைத்தது ஒரு பெரிய தேசியத் திருவிழாவாகக் கொண்டாடப்பட்டது. அனுராதபுரத்தின் பெருமைக்கும் புனிதத்துக்கும் காரணமாயிருப்பது அங்குள்ள போதி விருக்ஷம்தான். இலங்கையின் ஏற்றத் தாழ்வுகளையும் கஷ்ட நஷ்டங்களையும் வெற்றி தோல்விகளையும் மௌனியாக நின்று பார்த்துக் கொண்டிருக்கும் இந்தப் போதி விருக்ஷம் இலங்கைக்கும் இந்தியாவுக்கு மிருந்த நட்புக்கும் சாட்சியாக நிற்கிறது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக இந்தப் போதிமரத்தை வணங்கும் சிங்களவர்கள் அது எங்கிருந்து வந்தது, எதற்காக வந்தது என்பதை மட்டும் ஞாபகப்படுத்திக் கொள்ளவில்லை!

## பிரதமரின் ஆசை

உலகத்தில் எவ்வளவோ சக்கரவர்த்திகளும் ராஜதந்திரிகளும் இதுவரை தோன்றியிருக்கிறார்கள். ஆனால் அவர்களில் வெகு சிலருடைய பெயர்களே கால வெள்ளத்தைக் கடந்து சிரஞ்சீவித் தன்மை பெற்றிருக்கின்றன. இலங்கையிலும் சிலாசாஸனங்களின் மூலமாகச் சிரஞ்சீவித் தன்மை பெற்றிருப்பவர் பராக்கிரம பாகு மன்னர். பராக்கிரம பாகுவின் அவதாரமென்று அடிக்கடி வர்ணிக்கப்படும் எங்கள் பிரதமர் சேனநாயகாவும் இலங்கையின் சரித்திரத்தில் தமது பெயர் என்றென்றும் சிரஞ்சீவியாக இருக்க ஆசை கொண்டிருக்கிறார்.

நேற்று முன்தினம் இலங்கையின் முதலாவது சுதந்திர ஆண்டு நிறைவு விழா தீபாலங்காரங்களுடன் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அதில் முக்கியத்துவம் பெற்றிருந்தது சுதந்திர ஞாபக ஸ்தூபிக்குப் பிரதமர் அஸ்திவாரக்கல் நாட்டியதுதான். இலங்கையின் நான்கு திசைகளிலிருந்தும் விசேஷச் செய்திகளோடு வாலிபர்கள் கொழும்புக்கு ஓடி வரும்படி செய்யப்பட்டார்கள். வடக்கே யாழ்ப்பாணம், தெற்கே தேவந்திர முனை, கிழக்கே மட்டக்களப்பு, மேற்கே கொழும்பு ஆகிய நான்கு நகரங்களிலிருந்தும் தமிழ், சிங்களம், அரபு, ஆங்கிலம் ஆகிய நான்கு பாஷைகளிலும் பனை ஓலைகளிலே எழுதிய ஸ்ரீமுகத்துடன் ஓட்டக்காரர்கள் வந்து சேர்ந்தார்கள்.

'சுதந்திர இலங்கையின் முதலாவது பிரதம மந்திரி கௌரவ டி. எஸ். சேனநாயகாவுக்கு' என்று விலாசமிடப்பட்டிருந்த அந்தப் பனை ஓலைச் செய்திச் சுருள்களைப் பிரதமர் ஓர் அழகிய சிறு மரப் பெட்டியில் வைத்து, அந்தப் பெட்டியை ஒரு பெரிய கல்லுக்குள் வைத்து, அந்தக் கல்லைச் சுதந்திர ஞாபக ஸ்தூபியின் அஸ்திவாரக் கல்லாக நாட்டினார். ஸ்தூபியின்பேரில் பிரதமரின் பெயரைச் செதுக்கத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. சிலாசாஸனங்களின் மூலமாகவும் கண்டெடுக்கும் பழங்கால ஓலைச் சுவடிகளின் மூலமாகவும் புராதன சிங்கள மன்னர்களின் வீர பராக்கிரமச் செயல்கள் வெளியாகிக் கொண்டிருப்பதைப் போல, — ஜயஸ்தம்பங்களினால் அசோகரின் பெயர் நிலைத்திருப்பதைப்போல, சேனநாயகாவின் பெயரும் நிலைத்திருக்க அவ்வாறு செய்யப்பட்டது போலும்!

## உண்ணாவிரதம்!



“ஓய், ஐயரே! நான் இன்றைக்கிருந்து உண்ணாவிரதம் இருக்கப் போகிறேன். எட்டு இட்டிலி, நாலு பிளேட் பூரி உருளைக் கிழங்கு, பத்து வடை, ஆறு போண்டா, மூணு மசாலா தோசை உடனே கொண்டு வாரும்!”




# 65. சத்தியமே ஜயம்

ஸ்ரீமதி கஸ்தூரிபாய் முதலிய ஸ்திரீ சத்தியாக்கிரஹிகள் 1913-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 23-ந் தேதி சிறைத் தண்டனை விதிக்கப் பட்டார்கள். அதிலிருந்து மூன்று மாத காலம் தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரஹ இயக்கம் தீவிரமாக நடைபெற்றது. ஆயிரக்கணக்கான தொழிலாளிகள் சட்ட மறுப்புச் செய்து அளவற்ற கஷ்ட நஷ்டங்களை அனுபவித்தார்கள். இயக்கத்தின் தலைவர்கள் அனைவரும் சிறை புகுந்தார்கள். ஆயினும் இயக்கத்தின் வேகம் குன்றவில்லை; கொந்தளிப்பு அதிகமாகிக் கொண்டிருந்தது. இந்தியாவில் ஸ்ரீ கோகலேயின் முயற்சியினால் பெருங் கிளர்ச்சி ஏற்பட்டிருந்தது. இந்தியாவின் பிரிட்டிஷ் வைஸ்ராய் ஹார்டிஞ்ச் தென்னாப்பிரிக்கா சர்க்காரின் செயலைப் பகிரங்கமாகக் கண்டனம் செய்தார். உலகம் தென்னாப்பிரிக்காவில் நடந்த அதிசயமான போராட்டத்தைக் கவனிக்க ஆரம்பித்தது.

"சத்தியமே ஜயம்" என்னும் மகா வாக்கியத்தின் உண்மை உலகமறிய ஸ்தாபிக்கப்படும் காலம் வந்தது. தென்னாப்பிரிக்க் மந்திரிகளின் பிடிவாதம் தளர்ந்தது. தளபதி ஸ்மட்ஸின் மனம் இளகியது. இந்தியர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியை நிவர்த்தி செய்தே ஆக வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார். தம்முடைய அரசாங்கத்தின் மதிப்புக் குறையாமல் அதைச் செய்வதற்கு வழி என்ன என்று தேடினார்.

இந்த மாதிரியான சந்தர்ப்பங்களில், அதாவது சர்க்கார் பொதுஜனக் கிளர்ச்சிக்கு விட்டுக் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும் போதெல்லாம், ஒரு விசாரணைக் கமிஷனை நியமிப்பது அரசியல் துறையில் அனுசரிக்கப்படும் உபாயமாகும். அதே உபாயத்தைத் தளபதி ஸ்மட்ஸ் இப்போது கடைப்பிடித்தார்.

இந்தியர்களுடைய குறைகளைப் பற்றி விசாரித்துத் தக்க சிபார்சுகளைச் செய்வதற்காக மூன்று பேர் அடங்கிய ஒரு கமிஷனை நியமனம் செய்தார்.

இந்தக் கமிஷனின் முதல் கூட்டத்தில், "விசாரணை சரியான முறையில் நடைபெறுவதற்காகக் காந்தி, காலன்பாக், போலக் இந்த மூவரையும் நிபந்தனையின்றி விடுதலை செய்ய வேண்டும்" என்று சிபார்சு செய்யப்பட்டது. அதன்படியே 1913-ம் வருஷம் டிசம்பர் மாதம் 18உ காந்திஜியும் அவருடைய துணைவர்கள் இருவரும் விடுதலையானார்கள்.

காந்திஜி சிறையிலிருந்து வெளி வந்ததும் கமிஷன் நியமனத்தைப் பற்றித் தெரிந்து கொண்டார். நண்பர்களுடன் கலந்து ஆலோசித்தார். இரண்டு நிபந்தனைகள் பூர்த்தியானால்தான் மேற்படி கமிஷனுடன் இந்தியர்கள் ஒத்துழைக்க முடியுமென்று தீர்மானித்தார். அதாவது, (1) கமிஷனில் இந்தியர்களின் சார்பாக ஒரு அங்கத்தினராவது சேர்க்கப்பட வேண்டும்; (2) சிறையில் உள்ள சத்தியாக்கிரஹிகள் எல்லாரையும் விடுதலை செய்ய வேண்டும். இந்த இரண்டு நிபந்தனைகளையும் குறிப்பிட்டுத் தளபதி ஸ்மட்ஸுக்குக் கடிதம் எழுதினார்.

இதற்கிடையில், தென்னாப்பிரிக்காவில் நடந்த சத்தியாக்கிரஹ இயக்கத்தைக் கவனிப்பதற்காகவும் உதவி செய்வதற்காகவும் இரண்டு உத்தம புருஷர்கள் இந்தியாவிலிருந்து வந்திருந்தார்கள். ஒருவர் தீனபந்து ஆண்ட்ரூஸ்; இன்னொருவர் அவருடைய ஆத்ம சிநேகிதர் பியர்ஸன். இருவரும் ஐரோப்பியர்கள்தான்; ஆனால் இந்தியாவிடத்திலும் இந்தியர்களிடத்திலும் அன்பு கொண்டவர்கள். தென்னாப்பிரிக்காவில் நடந்த இயக்கத்தைப் பற்றி காந்திஜியின் ஐரோப்பிய நண்பர் மிஸ்டர் வெஸ்ட் அவ்வப்போது ஸ்ரீ கோகலேக்குத் தகவல் தெரிவித்து வந்தார். இந்தத் தொண்டு செய்வதற்காகவே காந்திஜியின் விருப்பத்தின்படி

அவர் போராட்டத்தில் சேராமலிருந்தார். ஆனால் தென்னாப்பிரிக்கா சர்க்கார் அவரைச் சும்மா விட்டிருக்கவில்லை. கைது செய்து சிறைக்கு அனுப்பி விட்டார்கள். இந்தச் செய்தி அறிந்ததும் ஸ்ரீ கோகலே மேற்கூறிய இருவரையும் தென்னாப்பிரிக்காவுக்கு அனுப்பிவைத்தார். அவர்கள் வந்து சேர்ந்தபோது காந்திஜி சிறையிலிருந்து விடுதலை அடைந்து விட்டபடியால் டர்பனுக்குச் சென்று அவர்களை நேரில் வரவேற்றார்.

இந்த நண்பர்கள் வந்து சேர்ந்த இரண்டு நாளைக்கெல்லாம் தளபதி ஸ்மட்ஸின் பதில் வந்தது. கமிஷனில் புதிய அங்கத்தினர் யாரையும் சேர்த்துக் கொள்ள முடியாது என்றும், சர்க்கார் தங்களுடைய கொள்கையின்படி விசாரணைக் கமிஷன் நியமித்திருக்கிறார்களே யல்லாமல் எந்தக் கட்சியையும் திருப்தி செய்வதற்காக நியமிக்கவில்லையென்றும் பதிலில் கண்டிருந்தது.

எனவே 1914-ம் ஜனவரி மீ 1உ மறுபடியும் டர்பனிலிருந்து காந்திஜியும் அவருடைய சகாக்களும் சட்ட மறுப்பு யாத்திரை தொடங்க வேண்டும் என்று தீர்மானமாயிற்று.

இவ்விதம் தீர்மானித்த பிறகு காந்திஜி தளபதி ஸ்மட்ஸுக்கு இன்னொரு கடிதம் எழுதினார். கடிதம் எழுதுவதற்குக் காரணமா யமைந்தது ஸ்மட்ஸின் பதிலில் காணப்பட்ட ஒரு வாக்கியம். "பாரபட்சமில்லாத கமிஷனைநாங்கள் நியமித்திருக்கிறோம். கமிஷன் நியமனத்தில் இந்தியர்களைக் கலந்து கொள்ளவில்லையென்றால், தோட்ட முதலாளிகளையும் சுரங்க முதலாளிகளையும் கூடக் கலந்து கொள்ளவில்லை" என்று ஸ்மட்ஸ் எழுதி யிருந்தார். காந்திஜி இதைக் குறிப்பிட்டு, "இந்தியர்களுக்கு நியாயம் செய்வது சர்க்காரின் நோக்கமாயிருக்கும் பட்சத்தில் தங்களை நேரில் கண்டு சில உண்மைகளைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்" என்று எழுதினார்.

அவ்வாறே காந்திஜியை நேரில் பார்க்கச் சம்மதிப்பதாக தளபதி ஸ்மட்ஸிடமிருந்து பதில் வந்தது. எனவே, அந்தப் பேட்டி முடியும் வரையில் டர்பனிலிருந்து யாத்திரை கிளம்புவதை ஒத்திவைப்பதென்று தீர்மானம் ஆயிற்று.

இதற்கிடையில் இந்தியாவிலிருந்து ஸ்ரீ கோகலே காந்திஜிக்கு ஒரு நீண்ட தந்திச் செய்தி அனுப்பினார். மறுபடியும் சட்டமறுப்பு யாத்திரை ஆரம்பிப்பது உசிதமல்லவென்றும் லார்ட் ஹார்டிஞ்சும் தாமும் செய்து வரும் முயற்சிகளுக்கு அதனால் குந்தகம் ஏற்படும் என்றும் அதில் கோகலே குறிப்பிட்டிருந்தார்.

மகாத்மா இதற்குப் பதில் தந்தி அனுப்பினார்:— "தங்களுக்கு மன வருத்தம் அளிக்கச் சிறிதும் விருப்பமில்லை. ஆனால் ஆயிரக்கணக்கான இந்தியர்கள் ஆண்டவன் சாட்சியாக எடுத்துக் கொண்ட சபதத்தின் அடிப்படையில் சத்தியாக்கிரஹ இயக்கம் நடைபெறுகிறது. அந்தச் சபதத்தைக் கை விடுவது சரியாகுமா? ஆகையால் இயக்கத்துக்குத் தங்களுடைய ஆசியையும் ஆதரவையும் கோருகிறோம்."

இந்தத் தந்தியினால் ஸ்ரீ கோகலேயின் உடல் நிலை பாதகம் அடைந்தது ஆயினும் அவருடைய உற்சாகம் குறையவில்லை. காந்திஜியையும் தென்னாப்பிரிக்கா இந்தியர்களையும் அவர் கைவிடத் தீர்மானிக்கவும் இல்லை. முன்னைக் காட்டிலும் அதிக ஊக்கத்துடன் காந்திஜியின் கட்சியை ஆதரித்து நின்றார்.

இந்தச் சமயத்தில் தென்னாப்பிரிக்கா ரயில்வேக்களின் ஐரோப்பிய ஊழியர்கள் பெரும் வேலை நிறுத்தம் செய்தார்கள். இதனால் தென்னாப்பிரிக்கா சர்க்கார் பெரும் கஷ்டத்துக்கு ஆளானார்கள். சர்க்கார் கஷ்டத்துக்கு ஆளாகியிருக்கும் சமயத்தில் இந்தியர்கள் சட்ட மறுப்பு யாத்திரை தொடங்கி விட வேண்டும் என்று சிலர் சொன்னார்கள். காந்திஜி இதற்கு உடன்படவில்லை. வேலை நிறுத்தம் சம்பந்தமான சர்க்காரின் கஷ்டம் தீர்ந்த பிறகுதான் இந்தியர்கள் சத்தியாக்கிரஹம் ஆரம்பிக்க வேண்டும் என்றும், எதிராளிகளின் கஷ்டத்தைப் பயன்படுத்திக் கொள்வது சத்தியாக்கிரஹம் அல்லவென்றும் கூறிவிட்டார்.

இந்த முடிவு இங்கிலாந்தில் நல்ல பயனை அளித்தது. இந்தியர்களுடைய பெருந்தன்மையைப் பாராட்டி லார்ட் ஆம்த்தில் வாழ்த்துத் தந்தி கொடுத்தார்.

இத்தகைய சூழ்நிலையில் காந்திஜி தளபதி ஸ்மட்ஸைப் பேட்டி காண்பதற்குப் பிரிடோரியா சென்றார். அவருடன் ஸ்ரீ ஆண்ட்ரூஸும் போனார்.

இந்தத் தடவை ஜெனரல் ஸ்மட்ஸ் முன்னெல்லாம் அகம்பாவமாய் நடந்து கொண்டதுபோல் நடந்து கொள்ளவில்லை. சமரச தோரணையில் பேசினார். அவர் காந்திஜியிடம் கூறியதாவது:— "கமிஷனில் புதிதாக அங்கத்தினரைச் சேர்த்துக் கொள்வது முடியாத காரியம். அவ்விதம் செய்தால் அரசாங்கத்தின் கௌரவத்துக்கு ஹானி ஏற்படும். அப்படி ஏற்பட்டால் நான் செய்ய விரும்புகிற சீர்திருத்தங்களைச் செய்ய முடியாமற்

போய்விடும். கமிஷனைப்பற்றி உங்களுக்கு என்ன கவலை? அரசாங்கம் உங்களுடைய கோரிக்கைகளை ஒப்புக் கொள்ளத் தீர்மானித்து விட்டது. அதற்குக் கமிஷனுடைய சிபார்சுதான் தேவை. இப்போது கமிஷனில் அங்கத்தினராயிருப்பவர்கள் இந்தியர்களுக்கு விரோதமானவர்கள் என்று பெயர் பெற்றவர்கள். அவர்களே மூன்று பவுன் தலைவரியை எடுக்க வேண்டும் என்று சிபார்சு செய்து விட்டால் அரசாங்கத்தின் பளுக் குறைந்துவிடும். உத்தேசித்திருக்கும் காரியங்களைச் சுலபமாகச் செய்துவிடலாம். உங்களுடைய நிலைமையையும் நான் அறிந்திருக்கிறேன். இந்தக் கமிஷன் முன்னிலையில் நீங்கள் சாட்சியம் விட விரும்பவில்லையென்றால், விட வேண்டியதில்லை. ஆனால் எதிர்ப் பிரசாரம் செய்யாமலிருங்கள்; சத்தியாக்கிரஹத்தை நிறுத்திவையுங்கள். இதனால் உங்களுடைய நோக்கம் நிறைவேறுவதற்கு அநுகூலம் ஏற்படும்!''

தளபதி ஸ்மட்ஸ் இவ்வாறு சமரசமாகப் பேசினார். அத்துடன் சர்க்காரின் நோக்கம் இன்னதென்பதையும் தெரியப்படுத்திவிட்டார். இதற்குமேல் போராட்டத்தை நடத்துவதில் அர்த்தமில்லை. காரியம் ஆகவேண்டியதுதான் முக்கியம். கமிஷன் அமைப்பு எப்படியிருந்தால் என்ன? கமிஷன் முன்பு சாட்சியம் விடவேண்டியதுதான் என்ன முக்கியம்?

சாட்சியம் விடாவிட்டால் ஒரு காரியத்துக்குக் குந்தகம் ஏற்படும். வேலைநிறுத்தம் செய்த தொழிலாளிகளைப் போலீஸாரும் இராணுவத்தாரும் கொடுமையாக நடத்தினார்கள் என்று இந்தியத் தலைவர்கள் புகார் செய்திருக்கிறார்கள். அதைப் பற்றி விசாரிக்கவும் கமிஷனுக்கு அதிகாரம் தரப்பட்டிருந்தது. சாட்சியம் விடாமற் போனால் மேற்படி கொடுமைகளை நிரூபிக்க முடியாமற் போய்விடும். ஆனால் இதை ஒரு முக்கிய விஷயமாகக் காந்திஜி கருதவில்லை. முதலாவது, போலீஸ் கொடுமைகளைப் பற்றிச் சாட்சியம் தயாரித்து நிரூபிப்பது மிகவும் கடினமான காரியம். அந்த மாதிரி நிரூபித்துப் பழிக்குப் பழி வாங்குவது சத்தியாக்கிரஹ தர்மமும் அல்ல. சத்தியாக்கிரஹிகள் கஷ்டப்படுவதென்றே கங்கணம் கட்டிக்கொண்டவர்கள். அதைப்பற்றி இப்போது புகார் சொல்லுவதில் என்ன லாபம்?—புகார் சொல்லாமலிருந்தால் காரியசித்திக்கு அதிக அநுகூலம் ஏற்படும். இதையெல்லாம் காந்திஜி யோசித்து, கமிஷன் விசாரணையில் கலந்துகொள்வதுமில்லை, விசாரணை முடிவு வெளியாகும் வரை









யில் சத்தியாக்கிரஹம் தொடங்குவது மில்லை என்ற முடிவுக்கு வந்தார்.

மறுபடியும் சில முறை ஸ்மட்ஸும் காந்திஜியும் சந்தித்துப் பேசினார்கள். சந்திப்புகளின் முடிவில் காந்திஜி பின்னால் தகராறு ஏற்படுவதற்கு இடமில்லாமல் செய்யும் பொருட்டு தளபதி ஸ்மட்ஸுக்கு ஒரு கடிதம் எழுதினார். அந்தக் கடிதத்தின் சாராம்சம் பின்வருமாறு:—

"இப்போது அமைக்கப்பட்டிருக்கும் கமிஷன் முன்னிலையில் சாட்சியம் விடுவதற்கு இந்தியர்களின் மனச்சாட்சியைப் பொறுத்த காரணங்கள் தடை செய்கின்றன. ஆனால் இந்தியர்களுடன் கலந்தாலோசிப்பது என்ற கொள்கையைத் தாங்கள் ஒப்புக் கொண்டிருக்கிறீர்கள். ஆகையால் கமிட்டியின் சிபார்சுகளும் அவற்றின்பேரில் சர்க்காரின் முடிவுகளும் வெளியாகும் வரையில் சத்தியாக்கிரஹத்தை நிறுத்திவைக்கவும், கமிஷனுக்கு எதிரான பிரசாரம் செய்யாமலிருக்கவும் இந்தியர்களுக்கு யோசனை சொல்லத் தயாராயிருக்கிறேன்.

சத்தியாக்கிரஹத்தை நாங்கள் நிறுத்தி வைக்கிறபடியால் சிறையிலுள்ள சத்தியாக்கிரஹிகளைச் சர்க்கார் விடுதலை செய்யவேண்டுமென்று கோருகிறேன்.

இந்தியர்கள் எந்தெந்தத் துறைகளில் நியாயம் வேண்டுமென்று கோருகிறார்கள் என்பதை இங்கே வரிசைப்படுத்தித் தெரிவிக்க விரும்புகிறேன்.

(1) மூன்று பவுன் தலைவரியை எடுத்துவிட வேண்டும்.

(2) ஹிந்து மத வழக்கப்படியும், இஸ்லாமிய மத வழக்கப்படியும் நடந்த கலியாணங்களைச் சட்ட பூர்வமாக அங்கீகரிக்க வேண்டும்.

(3) படித்த இந்தியர்கள் சம்பந்தமான தடைகள் நீக்கப்பட வேண்டும்.

(4) ஒரு மாகாணத்தில் இந்தியர்களுக்குள்ள உரிமைகள் மற்ற மாகாணங்களிலும் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும்.

(5) இந்தியர்களைப் பாதிக்கும் சட்டங்கள் நியாயமாகவும் மாமூல் உரிமைகளுக்குக் குந்தகமில்லாமலும் அமுல் நடத்தப்பட வேண்டும்.

மேலே கண்ட கோரிக்கைகளைத் தாங்கள் அனுகூலமாகக் கவனிப்பதாயிருந்தால் இந்தக் கடிதத்தின் ஆரம்பத்தில் கூறியபடி இந்தியர்களுக்கு நான் யோசனை சொல்லக் கூடும்."

காந்திஜி எழுதிய மேற்படி கடிதத்துக்குத் தளபதி ஸ்மட்ஸ் எழுதிய பதிலின் சாராம்சம் வருமாறு:—

"கமிஷன் முன்னால் நீங்கள் சாட்சியம் விட முடியாதது பற்றி வருந்துகிறேன். பழைய புண்களைக் கிளறவேண்டாம் என்கிற தங்களுடைய நோக்கத்தைப் பாராட்டுகிறேன். உங்களுடைய கடிதம் வருவதற்கு முன்பே எல்லாச் சத்தியாக்கிரஹக் கைதிகளையும் விடுதலை செய்யச் சர்க்கார் உத்தரவு பிறப்பித்தாகி விட்டது. நீங்கள் குறிப்பிட்டிருக்கும் கோரிக்கைகளைப் பொறுத்தவரையில் 'விசாரணைக் கமிஷனுடைய சிபார்சுகளைப் பார்த்துக்கொண்டு சர்க்கார் தக்க நடவடிக்கை எடுப்பார்கள்."

மேற்கண்ட இரண்டு கடிதங்களும் ஸ்மட்ஸ்-காந்தி ஒப்பந்தம் என்று தென்னாப்பிரிக்கா சரித்திரத்தில் பிரசித்தி பெற்றன. ஏன்? உலக சரித்திரத்திலேயே பிரசித்தி பெற்றன என்றும் சொல்லலாம். சர்வாதிகாரமும் இராணுவ பலமும் படைத்த ஒரு சர்க்காரை நிராயுதபாணிகளான மக்கள் பலாத்காரத்தைக் கையாளாமல் அஹிம்சை முறையினால் எதிர்த்துப் போராடிச் சமரசத்துக்கு இணங்கும்படி செய்தது உலக சரித்திரத்திலேயே ஓர் அற்புதம் அல்லவா?

காந்திஜி இத்தகைய சமரசம் செய்து கொண்டது பற்றி அவர் பேரில் சிலர் புகார் சொல்லாமல் விடவில்லை. 1908-ம் வருஷத்தில் இதேமாதிரி தளபதி ஸ்மட்ஸின் பேச்சை நம்பி மோசம் போனதை எடுத்துக் காட்டினார்கள். மறுபடியும் அதே கதிதான் நேரிடும் என்றார்கள். இப்போது சத்தியாக்கிரஹத்தை நிறுத்தினால் மறுபடி இயக்கத்தை ஆரம்பிக்கவே முடியாது என்று எச்சரித்தார்கள்.

இதற்கெல்லாம் தக்க சமாதானம் காந்தி மகான் கூறினார். எதிராளிகளிடம் நம்பிக்கை வைப்பது சத்தியாக்கிரஹ தர்மத்தின் அடிப்படை என்று சுட்டிக் காட்டினார். எத்தனை தடவை ஏமாந்தாலும் மறுபடி நம்பியே தீரவேண்டும் என்று சொன்னார். மேலும் இந்தத் தடவை சமரசப் பேச்சுகளின்போது ஸ்ரீ சி. எப். ஆண்ட்ரூஸ் கூட இருந்திருப்பதாலும், இந்திய சர்க்காரின் சார்பாக வந்திருக்கும் ஸர் பெஞ்சமின் ராபர்ட்ஸன் நிலைமையைக் கவனித்து வருவதாலும், மோசம் போக இடமில்லை என்றும் தைரியம் கூறினார். கடைசியாக, இந்தியர்கள் அனைவரும் காந்திஜியின் யோசனைகளை ஏகோபித்து ஒப்புக் கொண்டார்கள்.

கமிஷனுடைய சிபார்சுகள் வெகு சீக்கிரத்தில் வெளியாகிவிட்டன. எதிர்பார்த்ததுபோல் அவை இந்தியர்களுக்குச் சாதகமாகவே இருந்தன. மூன்று பவுன்

தலை வரியை எடுக்க வேண்டும் என்றும், இந்தியர்களின் கலியாணங்களை அங்கீகரிக்கச் சட்டம் செய்ய வேண்டும் என்றும் கூறியதுடன், இந்தியர்களுக்குச் சாதகமான இன்னும் சில சில்லறைச் சிபார்சுகளும் செய்திருந்தார்கள். ஸ்மட்ஸ் கூறியது உண்மையாயிற்று. மேற்படி சிபார்சுகளை யொட்டிப் பார்லிமெண்டில் சட்டங்கள் சீக்கிரத்தில் நிறைவேற்றப் படும் என்றும் தெரிவிக்கப்பட்டது.

இந்தச் செய்தியைத் தெரிந்துகொண்டு ஸ்ரீ ஆண்ட்ரூஸ் இங்கிலாந்துக்கும் ஸர் பெஞ்சமின் ராபர்ட்ஸன் இந்தியாவுக்கும் பிரயாணமானார்கள்.

கமிஷன் அறிக்கை வெளியான சில தினங்களில் இந்தியர் குறை விவாரண மசோதா என்ற பெயருடன் சர்க்கார் மசோதா அரசாங்க கெஜட்டில் பிரசுரமாயிற்று. அதில் ஒன்பது பிரிவுகள் இருந்தன. ஒரு பிரிவின் மூலம் மாஜி ஒப்பந்தத் தொழிலாளரின் மீது விதிக்கப்பட்டிருந்த மூன்று பவுன் தலைவரி நீக்கப்பட்டது. மற்றொரு பிரிவின் மூலம் ஹிந்து - முஸ்லிம் மத சம்பிரதாயப்படி செய்த கலியாணங்கள் சட்டபூர்வமானவை என்று ஒப்புக் கொள்ளப்பட்டது. கேட்டாவில் ஒரு தடவை கொடுக்கப்பட்ட சர்ட்டிபிகேட் தென்னாப்பிரிக்கா முழுவதிலும் செல்லும் என்று அங்கீகரிக்கப் பட்டது. மாகாணத்துக்கு மாகாணம் இந்தியர்கள் செல்வதில் உள்ள தடைகள் நீக்கப்பட்டன.

தென்னாப்பிரிக்கா பார்லிமெண்டில் மசோதா விவாதத்துக்கு வந்தபோது காந்தி மகாத்மா கேப் டவுனுக்குச் சென்றிருந்தார். விவாதம் நல்ல முறையில் நடந்து, மசோதா நிறைவேறியது.

இதற்குப் பிறகு தளபதி ஸ்மட்ஸ் காந்திஜிக்கு எழுதிய கடிதத்தில் "இந்தியர் சம்பந்தமான சட்டங்களெல்லாம் தர்ம நியாயமாக அமுல் நடத்தப்படும்" என்று உறுதிகூறினர்.

இவ்விதமாக 1906-ம் ஆண்டில் ஆரம்பமான சத்தியாக்கிரஹப் போராட்டம் 1914-ம் ஆண்டில் மகத்தான வெற்றியுடன் முடிவடைந்தது. காந்திஜி ஸ்ரீ கோகலேக்கு வாக்குக் கொடுத்திருந்தபடி தாய்நாட்டின் தொண்டில் ஈடுபடுவதற்காக இந்தியாவுக்குப் பிரயாணப்படத் தீர்மானித்தார். இருபது வருஷ காலம் வசித்து, இன்ப துன்பங்களை அநுபவித்து, வாழ்க்கை இலட்சியத்தைக் கண்டு, பெரும்போர் நடத்தி வெற்றி பெற்ற நாட்டிலிருந்து புறப்படுவது எளிதாக இல்லை. அத்தனை நாளும் கலந்து பழகிச் சிநேகம் கொண்டிருந்த நண்பர்களிடமிருந்து பிரிவதும் கஷ்டமாகத்தான் இருந்தது. ஆயினும் காந்திஜி மனதைத் திடப்படுத்திக் கொண்டு, 1914 ஜூலை 18உ தென்னாட்பிரிக்கா இந்தியரிடம் முடிவாக விடை பெற்றுக் கொண்டு பிரயாணமானார்.

அச்சமயம் ஸ்ரீ கோகலே இங்கிலாந்தில் இருந்தார். அவருடைய விருப்பத்தின்படி இங்கிலாந்து சென்று அவரைப் பார்த்து விட்டு இந்தியா போகலாம் என்று எண்ணி இங்கிலாந்து சென்ற கப்பலில் மகாத்மா ஏறினார்.

காந்தி மகாத்மா தென்னாப்பிரிக்காவில் நடத்திய மகத்தான சத்தியப் போரின் சரித்திரம் இத்துடன் முடிவடைகிறது. இதைப் படிக்கும்போது நமக்குத் தற்சமயம் தென்னாப்பிரிக்காவி லுள்ள இந்தியரின் நிலைமை ஞாபகம் வராமல் இராது. "இன்னும் தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் கஷ்டப்பட்டுக் கொண்டு தானே இருக்கின்றார்கள்? அவர்களுடைய துயரங்கள் தீர்ந்த பாடாக இல்லையே?" என்று தோன்றும்.

ஆனால் ஒரு விஷயத்தை ஞாபகப் படுத்திக் கொள்ள வேண்டும். அந்தக் காலத்தில் தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் கஷ்டம்



"என்ன பஞ்சு! நேத்திக்கு நாடக சபாவிலே 'டபின் ஆக்ட்' போட்டுக் கொண்டு நடித்தாய் போலிருக்கே!"

"அடே! உனக்கு எப்படித் தெரிஞ்சுது?"

"ஜனங்கள் 'நேற்று டபின் ஆக்ட் போட்டுண்டவன் ரொம்ப மட்டமா நடிச்சான்' என்று சொல்லிண்டிருந்தா! அப்படியானால் நீ யாகத்தான் இருக்கும் என்று நிச்சயம் செய்துகொண்டேன்!"

வேறு; இப்போதுள்ள கஷ்டங்கள் வேறு. அன்றைய நிலைமையில் மகாத்மா காந்தி போராட்டம் நடத்தி வெற்றி அடைந்திராவிடில், இப்போது தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களே இருந்திருக்க மாட்டார்கள். மூன்று பவுன் தலைவரி, கலியாண ரத்துத் தீர்ப்பு, கட்டாயப் பதிவுச் சட்டம் முதலியவற்றின் கொடுமையினால் இந்தியர்கள் ஒன்று இந்தியாவுக்குத் திரும்பி வந்திருப்பார்கள்; அல்லது அடியோடு அழிந்திருப்பார்கள்.

மகாத்மா தென்னாப்பிரிக்காவை விட்டுப் புறப்பட்டு இப்போது முப்பத்தைந்து வருஷம் ஆகிறது. இந்த முப்பத்தைந்து வருஷத்தில் அங்கே இந்தியர்கள் வாழ்ந்து, தொழில் செய்து, பொருள் தேடி, பல்கிப் பெருகியிருக்கிறார்கள். இதன் காரணமாகவே ஐரோப்பியர்கள் — ஆப்பிரிக்கர்கள் — ஆகிய இரு சாராரின் பொறாமைக்கும், துவேஷத்துக்கும் ஆளாகியிருக்கிறார்கள். எனினும், எதிர்த்து நின்று போராடும் சக்தி இன்று தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்கு இருக்கிறது. அந்த சக்தியை அவர்களுக்கு அளித்தது காந்தி மகாத்மாவும் அவருடைய சத்தியாக்கிரஹ இயக்கமுந்தான்.

காந்திஜியுடன் ஒப்பந்தம் செய்து கொண்ட தளபதி ஸ்மட்ஸ் பிறகு தம் வாக்குறுதியிலிருந்து மாறவில்லை யென்பதை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும்.

இன்றைய தினம் நிறத்துவேஷ இனத்துவேஷ வெறி கொண்டு காரியம் செய்யும் டாக்டர் மாலன் சர்க்காரை எதிர்ப்பவர்களில் தளபதி ஸ்மட்ஸ் முதன்மையாக இருக்கிறார். இதனால் தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் கட்சிக்கு இன்று உலகமெங்கும் ஆதரவு ஏற்பட்டு வருகிறது. இதற்கு மூலகாரணம் காந்தி மகாத்மா நடத்திய மகத்தான போராட்டந்தான் என்பதில் என்னளவும் ஐயமில்லை.

இப்போதும் டாக்டர் மாலன் சர்க்கார் இந்தியர்களைத் தென்னாப்பிரிக்காவிலிருந்து துரத்தி விடும் நோக்கத்துடனேயே காரியம் செய்கிறார்கள். இதற்காகச் சட்ட பூர்வமான நிர்ப்பந்தங்களைக் கையாளுவதுடன் ஆப்பிரிக்காவின் சுதேசிகளையும் இந்தியர்கள் மீது ஏவிவிட்டிருக்கிறார்கள். ஆனால் காந்தி மகாத்மா காட்டிய சத்தியப் போர் முறையைத் தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் கையாண்டு, இன்னமும் வெற்றி பெறலாம்.

தளபதி ஸ்மட்ஸை வென்ற ஆயுதத்தினால் டாக்டர் மாலனையும் வெல்லலாம் என்பதில் சந்தேகம் என்ன?

---

# காலக்ஷேபம்

---

**வக்கீல்:**—கண்டக்டர், நான் அவசரமாகக் கோர்ட்டுக்குப் போகணும், கொஞ்சம் ஏத்திக்கொள், அப்பா!

**கண்டக்டர்:**— உங்களை ஏத்திக்கிட்டாலும் கோர்ட்டிலே வந்து நிற்க வேண்டியதுதான்!

★

**கடைக்காரர்:**—இந்தப் பாட்டிலை மட்டும் தனியாக வாங்கிக் கொண்டால் இதன் விலை எட்டு அணா. இந்தப் பாட்டிலில் ஏதாவது இருந்தால் பாட்டிலுக்கு விலை கிடையாது.

**வாங்குபவர்:**—அப்படியானால் ஒரு கார்க் போட்டுக் கொடுங்கள்!

★

**டாக்டர்:**—இன்றைக்கு என் கையை விட்டு இரண்டு கேஸ் போகிறது.

**நண்பர்:**—ஐயையோ! ஏன், செத்துப் போய்விடுவார்களோ?

**டாக்டர்:**—இல்லை, ஐயா! சொஸ்தமாகி அவர்கள் வீட்டுக்குத் திரும்புகிறார்கள்.

பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இருந்த பைத்தியக்காரன் ஒருவன் டாக்டரைப் பார்த்து, "ஸார்! முந்தி யிருந்த டாக்டரை விட உங்களைத்தான் எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது!" என்றான்.

**டாக்டர் (ஆச்சரியத்துடன்):**—ஏன்?

**பைத்தியக்காரன்:**— நீங்களும் எங்களைப் போலவே இருக்கிறீர்கள். அதனால்தான்!

★

ஒரு பொதுக்கூட்டத்தில் ஒரு கல் வந்து விழுந்தது. அங்கிருந்த ஒருவர் அவசரம் அவசரமாகத் தம்முடைய மேல் வேஷ்டியை எடுத்துக் கட்டினார்.

**பக்கத்திலிருந்தவர் (அவரிடம்):**—வேண்டாம், வேண்டாம்! தொலைந்து போகிறான், ஸார்! யாராவது போக்கிரிப் பயலாயிருப்பான்!

**முதல் ஆசாமி:**—நான் அவனை ஒன்றும் செய்யப் போகவில்லை, ஸார்! கல் என் தலையில் விழாமல் இருப்பதற்காக அல்லவா மேல் வேஷ்டியைத் தலையில் கட்டினேன்!




# பொய் சொல்லாதே!

☆ மாலு ☆

சரஸ்வதி அம்மாளுக்குப் பட்டு ஒரே குழந்தை. அதனால் பட்டுவுக்கு எவ்வளவு செல்லம் கொடுக்க முடியுமோ அவ்வளவு செல்லம் கொடுத்து அருமையாக வளர்த்து வந்தாள். ஆனால் பட்டுவோ குறும்புத்தனம் உள்ளவளாகவும் பொய் சொல்லுபவளாகவும் இருந்தாள். சரஸ்வதி அம்மாள் எவ்வளவு முயன்றும் பட்டுவைத் திருத்த முடியவில்லை. பட்டுவின் தோழிகள் எல்லோரும் 'பொய் சொல்லிப் பட்டு', 'புளுகுணிப் பட்டு' என்று அவளைச் சதா கேலி செய்து கொண்டே இருப்பார்கள்.

ஒரு சமயம் சரஸ்வதி அம்மாளுக்குத் தேள் கொட்டிவிட்டது. வலி தாங்க முடியாமல் துடியாகத் துடித்து விட்டாள். அம்மாவின் வேதனையைக் கண்ட பட்டுவுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. அவளும் அழுதாள். அந்தச் சமயத்தில் சரஸ்வதி அம்மாள், "பட்டு! நீ அழுது கொண்டிருந்தால் எனக்கு இன்னும் கஷ்டமாக இருக்கிறது. உடனே போய்ப் பக்கத்திலிருக்கும் டாக்டரை அழைத்துக் கொண்டு வா!" என்று சொன்னாள். பட்டுவும் ஓட்டோடியும் போய் டாக்டரைக் கூப்பிட்டாள். ஆனால் டாக்டரோ பட்டு எப்பொழுதும் பொய் சொல்லுகிறவள் என்ற எண்ணத்தால் அவள் பேச்சை நம்பாமல், "நீ பொய் சொல்லுகிறாய்; நான் வர முடியாது!" என்று சொல்லி விட்டார்.

பட்டு அழுது கொண்டே வந்து தன் தாயாரிடம், "நான் பொய் சொல்லுகிறேனாம்! அதனால் டாக்டர் வரமாட்டேன் என்கிறார்!" என்று உண்மையைச் சொன்னாள்.

சரஸ்வதி அம்மாளுக்கும் பட்டுவின் வார்த்தையில் நம்பிக்கை இல்லை. "எங்கேயாவது டாக்டர் இப்படிச் சொல்லுவாரா? நீ பொய் தான் சொல்லுகிறாய்!" என்று பட்டுவைத் திட்டினாள்.

இவ்வாறு பட்டுவினால் சரஸ்வதி அம்மாளுக்கு நேர்ந்த கஷ்டங்களைச் சொல்லி முடியாது.

ஒரு நாள் பட்டு சரஸ்வதி அம்மாளிடம் ஓடிவந்து, "அம்மா! எனக்கு அடுத்த வீட்டு லலிதா போட்டிருப்பது போல் இரண்டு தங்க வளையல் வாங்கிக் கொடு, அம்மா!" என்று கெஞ்சினாள்.

சரஸ்வதி அம்மாள், "அவர்கள் எல்லாம் பணக்காரர்கள், தங்க வளையல் போட்டுக் கொள்வார்கள். நாம் பணத்துக்கு எங்கே அம்மா போவது? நீ போட்டிருக்கும் கண்ணாடி வளையல் தான் உன் கைக்கு நன்றாக இருக்கிறது. போ, சமர்த்தாய்ப் பள்ளிக்கூடம் போய்விட்டு வா!" என்று சொன்னாள்.

பட்டு அழ ஆரம்பித்து விட்டாள். சரஸ்வதி அம்மாள் எவ்வளவோ சமாதானம் சொல்லிப் பார்த்தாள். பட்டு பிடிவாதம் பிடித்தாள். சரஸ்வதி அம்மாளுக்குக் கோபம் வந்துவிட்டது. முதுகில் 'பளீர், டளீர்' என்று நாலு அறை கொடுத்து விட்டுத் தன் வேலையைக் கவனிக்கச் சென்று விட்டாள்.

பட்டு அடி தாங்க முடியாமல் அழுது கொண்டே தோட்டத்துப் பக்கம் சென்றாள். அங்கே அழகான பெண் ஒருத்தி அவள் முன் தோன்றி "ஏன் அம்மா, அழுகிறாய்?" என்று கனிவுடன் கேட்டாள்.

தான் தங்க வளையல் கேட்டதற்காக அம்மா அடித்தாள் என்று பட்டு உண்மையைச் சொன்னாள்.

"நீதான் புளுகுணிப் பட்டு வாயிற்றே! உன் வார்த்தையை எப்படி நம்புவது?" என்று அந்தப் பெண் கேட்டாள்.

"சத்தியமாகச் சொல்லுகிறேன்; நான் சொல்லுவது உண்மைதான்!" என்றாள் பட்டு.

"அப்படியானால் சரி; இந்தத் தங்க வளையலைப் போட்டுக்கொள்!" என்று சொல்லி, இரண்டு தங்க வளையல்களைப் பட்டுவிடம் கொடுத்துவிட்டு, அந்தப் பெண் மறைந்து விட்டாள்.

வளையல் கிடைத்தவுடன் பட்டுவுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. தன் தோழிகளிடம் போய் வளையலைக் காட்டினாள். "ஏது உனக்கு?" என்று எல்லாத் தோழிகளும் அவளைச் சுற்றி நின்று கேட்டார்கள்.

"அம்மா எனக்கு வாங்கிக் கொடுத்தாள்!" என்று ஒரு பொய்யைச் சொன்னாள் பட்டு.

அவள் அப்படிச் சொல்லி வாய் மூடுவதற்கு முன் கையிலிருந்த வளையலைக் காணவில்லை!

பட்டு அழுது கொண்டே அம்மாவிடம் சென்றாள். சரஸ்வதி அம்மாள், "ஏன் இப்படி அழுகிறாய்? என்ன நடந்தது, சொல்லு?" என்று கேட்டாள்.

பட்டு நடந்ததை யெல்லாம் நடந்தபடி தன் அம்மாவிடம் சொன்னாள். உடனே பட்டுவின் கைகளில் காணாமற்போன வளையல்கள் காணப்பட்டன.

பட்டுவுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. ஒரே ஓட்டமாக வெளியில் ஓடி வந்தாள். அங்கிருந்த தன் தோழிகளிடம், "என்னுடைய அம்மா எனக்கு வேறு வளையல்கள் வாங்கிப் போட்டுவிட்டாள்!" என்று மறுபடியும் பொய் சொன்னாள்.

இப்படி அவள் பொய் சொன்னதும் மறுபடியும் வளையல்கள் காணாமற் போய்விட்டன!

பட்டுவுக்கு ஒரே ஏமாற்றமாகப் போய்விட்டது. மீண்டும் அழுது கொண்டே வீட்டிற்கு வந்தாள். வழியில் பட்டுவுக்கு வளையல் கொடுத்த அந்த அழகிய பெண் நின்றுகொண்டிருந்தாள். அவளிடம் சென்று நடந்ததை யெல்லாம் சொன்னாள். உடனே அவள் கையில் தங்க வளையல்கள் காணப்பட்டது. அதைப் பார்த்த பட்டுவுக்கு ஆச்சரியமாகப் போய் விட்டது.

அவள் அந்த அழகிய பெண்ணைப் பார்த்தது பார்த்தபடி நின்றாள்.

அந்த அழகிய பெண், "நீ இனிமேல் பொய் சொன்னால் இந்த வளையல் மறைந்து விடும். அப்புறம் உண்மையைச் சொன்னால் கூடத் திரும்பி வராது. ஆகையால் இனிமேல் நீ உண்மையையே சொல்ல வேண்டும்" என்று சொல்லிப் பட்டுவை அன்போடு தூக்கி ஒரு முத்தம் கொடுத்து விட்டு மறைந்து விட்டாள்.

பட்டு துள்ளிக் குதித்துக் கொண்டே அம்மாவிடம் போய் எல்லா விஷயங்களையும் சொல்லிவிட்டு, "இனிமேல் நான் பொய்யே சொல்ல மாட்டேன், அம்மா!" என்றாள்.

"எல்லாம் கடவுளின் கிருபை" என்று எண்ணி, சரஸ்வதி அம்மாள் ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

---



"ஸார்! என் பார்க்கர் பௌண்டன் பேனாவை எவனோ திருடிக் கொண்டு போயிட்டான்......"

போலீஸ்காரர்:—அது சரி, நீ அந்தப் பேனாவை எங்கிருந்து அடிச்சுண்டு வந்தே?

# மலைக் கழுகு

**துஷ்யந்தன்**

**பா**ய்ந்து வரும் அலைகள் பாறையில் மோதி அயர்ந்து திரும்பிப் போகும் காட்சி, ஓயாது வீசும் காற்று, உயர்ந்தெழுந்து நிற்கும் கம்பீரமான அந்த மலைப்பாறைகள்—இவற்றின் மேல் கட்டப்பட்டிருக்கும் சிறு குடிசைகள்! அப்படியே இவற்றை உங்கள் மனக்கண் முன்னே கொண்டு வந்து நிறுத்திப் பாருங்கள்: இதுதான் கழுகு ஓடை என்ற கிராமம். மீன் பிடித்து வாழும் செம்படவர்களின் தனி ராஜ்யம். அமைதி என்பது அங்கே இல்லாவிட்டாலும்கூட அழகு இருக்கத்தான் செய்தது.

கீழே கடல் நீர் பெருகி வந்து நாசம் செய்துவிடும் என்ற பயத்தால், மலையின் உச்சியில் குடிசைகள் கட்டி வசிக்கும் விசித்திரமான இந்த மனிதர்களின் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்துகொள்ள எனக்கு என்னவோ ஓர் ஆசை ஏற்பட்டது. மெதுவாகக் கிராமத்தின் உள்ளே நுழைந்தேன். விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகள் என்னைச் சுற்றி வளைத்துக் கொண்டு வேடிக்கை பார்த்தன. அவர்களுடைய கழுத்தில் தாயத்து போல் என்னவோ கட்டியிருந்தது—உற்றுப் பார்த்தேன்; கழுகு போன்ற ஓர் உருவம் அதில் இருந்தது. பக்கத்தில் யாரும் இல்லை. மீன் பிடிப்பதற்காக ஆண்கள் காலையிலேயே போயிருப்பார்கள். பெண்களும் குழந்தைகளும் மட்டும்தான் அங்கே இருந்தார்கள். ஆகவே என் சந்தேகத்தை யாரிடமும் கேட்டுத் தெரிந்து கொள்ள முடியவில்லை. மெதுவாக நடந்து குடிசைகளைத் தாண்டி விட்டேன்.

கொஞ்ச தூரத்தில் ஏதோ நீர் வீழ்ச்சி இருப்பது போல் சத்தம் கேட்கவே அந்தப் பக்கம் நடந்தேன். நல்ல காற்று; ஆனால் குளுமையாகவே இருந்தது. சிறிது தூரத்தில் ஓர் ஓடை இருப்பது தென்பட்டது. எங்கிருந்தோ ஓடி வந்து, இந்தப் பாறையின் மேலிருந்து கீழே விழுந்து, சமுத்திரத்தோடு சங்கமம் ஆகிறது அந்த ஓடை. அது பாறையிலிருந்து விழும் காட்சியைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தேன். செங்குத்தான இடத்திலிருந்துதான் தண்ணீர் கீழே விழுகிறது; கொஞ்சம் அபாயகரமான இடம் என்றுதான் பட்டது. பக்கத்தில் ஒரு பாறை கொஞ்சம் தட்டையா
இருந்தது. அங்கே யாரோ ஒரு கிழவ
உட்கார்ந்திருந்தான். அவனைப் பார்த்தது
எனக்கு ஏதோ காணாததைக் கண்டுவிட்ட
மகிழ்ச்சி! அப்பாடா, கடைசியில் ஒரு மனி
தன் அகப்பட்டுவிட்டான்! நான் கேட்
வேண்டியவைகளை யெல்லாம் அவனிட
கேட்டுவிடலா மல்லவா?

கிழவன் என்னைப் பார்த்ததும் எழுந்
நின்று கொண்டான். அவனை உட்கா
வைத்துவிட்டு நானும் உட்கார்ந்தேன். அ
பொழுதுதான் என் கண்களுக்கு மற்றொ
அதிசயமான காட்சி தென்பட்டது. நாங்க
உட்கார்ந்திருந்த இடத்திலிருந்துதான் அந்த
காட்சியைப் பார்க்க முடியும். ஆமாம், அந்
பாறைக்கு நேர் கீழே மற்றொரு பாறை
நீட்டிக் கொண்டிருந்தது. அங்கே சிறி
கோவில் ஒன்று இருந்தது. அதன் அருகி
ஒரு பெரிய கொம்பு, யானைத் தந்தம்போ
வளைந்திருந்தது. அதைவிட அதன் பக்கத்
லிருந்த பெரிய கழுகுதான் என் கவனத்தை
கவர்ந்தது. சாதாரணமாக மலைக் கழு
கள் பெரியதாகத்தான் இருக்கும். ஆனா
இதுவோ மிகப் பெரியதாக இருந்தது. வ
தானதாக இருக்கவேண்டும். சிறகுகளெ
லாம் உதிர ஆரம்பித்து விட்டன. இரு
தாலும் அதன் கம்பீரம் குன்றவில்லை.

நான் இவற்றைப் பார்த்துவிட்டுக் கிழ
னைப் பார்த்தேன். என் கண்களே அ
னுக்கு என் ஆவலையும் பிரமிப்பையும் தெ
வித்திருக்க வேண்டும். நான் கேட்காமலே
அவன் சொன்னதிலிருந்து அந்தக் கொம்பும்
கழுகும் அவர்களுக்குக் குல தெய்வம் என்
தெரிந்து கொண்டேன்.

கொம்பு கரு என்ற மீனுடைய பெரி
கொம்பாம் அது. அதை கட்டி வைத்
பூசை போட்டால் உடனே மழை வருமா
இது செம்படவர்களின் நம்பிக்கை. ஆனா
இதைவிட அந்தக் கழுகின் கதைதா
என்னைத் திகைக்க வைத்துவிட்ட
தெய்வமாக அவர்கள் போற்றுவதற்கு அந்த
கழுகு அருகதை உள்ளதுதான். எ
னையோ வருஷங்களுக்கு முன்னால் அ
செய்த காரியத்தின் பலனாகத்தான் இன்

செம்படவர்களின் தலைவனான கழுகு ராஜன் எங்களுக்கிடையே உயிரோடிருக்கிறான். அவனைக் காப்பாற்றி அவனுக்குக் குலதெய்வமாகிவிட்டது அந்தக் கழுகு. அதிசயமான அந்தக் கதை இதுதான் :

* * *

சுமார் முப்பது வருஷங்களுக்கு முன்னால் நடந்தது. அப்போது இந்தச் செம்படவர்களின் தலைவன் பொம்மண்ணன். வெகு நாட்களுக்குப் பிறகுதான் அவனுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. ஆகவே அந்தக் குழந்தையை வளர்ப்பதில் செம்படவர்கள் அத்தனை பேரும் முனைந்திருந்தார்கள். அவர்களுக்குத் தலைவனாக வரவேண்டியவன் அவன்தானே ?

குழந்தையும் நன்றாக, அழகாக வளர்ந்தான். ஆனால் அவனைப் பார்த்துக் கொள்ளவே ஒருவர் தனியாக வேண்டியிருந்தது. அவ்வளவு துடுக்கு. கொஞ்சம் அயர்ந்து விட்டால் அவன் எங்கேயாவது ஓடி விடுவான். பிறகு கண்டு பிடிப்பது கொஞ்சம் கஷ்டம் தான். மழலைச் சொல் வாயில் வருவதற்கு முன்பே அவனுக்குக் கட்டு மரத்தின் மீதேறி மீன் பிடிக்க வேண்டுமென்ற ஆசை வந்து விட்டது.

அவன் குலத்தொழில் அவனுடைய ரத்தத்தில் ஊறியிருந்தது. சின்ன வயதிலேயே ஏதாவது கட்டையைக் கீழே போட்டுக்கொண்டு மேலே ஏறி உட்கார்ந்து அப்படியும் இப்படியும் ஆடுவான். ஆமாம், அவன் மீன் பிடிக்கிறானாம் !

அவன் அப்பனுக்கு இதைப் பார்த்ததும் எவ்வளவு ஆனந்தமாயிருக்கும், தெரியுமா ? அந்த இன்பம் பெற்றவனுக்கும் பெற்றவளுக்கும்தான் தெரியும்.

அன்றும் அப்படித்தான் விளையாடிக் கொண்டிருந்தான். ஆயா கொஞ்சம் கண் அயர்ந்தாள். அவ்வளவுதான் ; பயல் நழுவிவிட்டான். எங்கேயோ சுற்றிக் கடைசியில் இந்த ஓடைக்கு வந்துவிட்டான். அவனை யாரும் கவனிக்கவில்லை. ஆண்கள் கடல் மேலே போய்விட்டார்கள். பெண்கள் எல்லோரும் சேர்ந்து எங்கேயோ கூடிப் பேசிக் கொண்டே இருந்து விட்டார்கள்.

இந்த ஓடையைப் பார்த்ததும் அவன் என்ன நினைத்தானோ ? எதையோ எடுத்துக் கட்டுமரம் போல் தண்ணீரில் போட்டான் ; அதன்மேலே ஏறி உட்கார்ந்துவிட்டான் !— என்ன ஆகியிருக்கும் ! நேரே பாறையிலிருந்து ஓடை கீழே விழும் இடத்திற்குச் சற்றுத் தூரத்தில் வந்துவிட்டான்.

அப்பொழுதுதான் அவனைத் தேடிப் பார்த்துக் களைத்துவிட்ட பெண்கள் அந்தப் பக்கம் வந்து சேர்ந்தார்கள். பயங்கரமான அந்தக் காட்சி அவர்களைக் குழப்பிவிட்டது. அவன் சிரித்துக்கொண்டே கட்டையின் மேலே படுத்துக் கொண்டிருந்தான் !

இன்னும் இரண்டு நிமிஷங்களில் பாறையிலிருந்து கீழே, கீழே அவன் போய்க் கொண்டிருப்பான். என்ன செய்வது ? ஆண்கள் திரும்பி வர இன்னும் எத்தனையோ நாழிகை இருந்தது. பெண்கள் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தனர்.

இந்தக் கூச்சலைக் கேட்டுப் பாறையின் மேலே உட்கார்ந்திருந்த இந்தக் கழுகு சட்டென்று எழுந்து உயரப் பறந்தது. கழு



குப் பார்வை என்று சொல்லுவார்கள்; அது நிஜயமாய்த்தான் இருக்க வேண்டும். அதன் கூர்மையான கண்களுக்குக் குழந்தை ஓடையில் வேகமாக மிதந்துவந்து, பாறையின் முனைக்கு வந்துவிட்டது தெரிந்ததோ என்னவோ?—அது சிறகுகளை மடக்கி அப்படியே கீழே செங்குத்தாக இறங்கியது. ஒரு விநாடிதான்! அதன் கால்களுக்கிடையே குழந்தையைத் தாவிப் பிடித்துவிட்டது! எத்தனையோ, பெரிய பெரிய ஆட்டுக்குட்டிகளையெல்லாம் அனாயாசமாகத் தூக்கிச் செல்லும் அந்தக் கழுகுக்கு இந்தக் குழந்தை அப்படி ஒன்றும் பிரமாதமான கனமல்ல. இருந்தாலும் கீழே இருந்து பார்த்துக் கொண்டிருந்த பெண்களுக்கு எப்படி இருக்கும்? பயமும் கூச்சலும் பெருகிவிட்டது. இன்னுமொரு திகிலும் அவர்களைப் பற்றிக் கொண்டு விட்டது. இந்தக் கழுகு ஒருக்கால் குழந்தையைக் கொண்டுபோய்ப் புசித்துவிட்டால்......?

ஆனால் யார் செய்த தவமோ, அந்தப் போராட்டத்திலிருந்து குழந்தை உயிர் தப்பி விட்டான். கழுகு அவனைப் பாறை மேல் விட்டுவிட்டுப் பறந்து போய்விட்டது.

இப்பொழுது அவன்தான் செம்படவர்களின் தலைவனான கழுகு ராஜன். தன்னைக் காப்பாற்றி விட்ட கழுகை அவன் மறக்கவில்லை. அது வசித்து வந்த பாறையிலேயே அதற்குக் கோவில் கட்டி வைத்திருக்கிறான். அதன் இளமை கழிந்து விடவே இப்பொழுது அதற்கு ஆகாரமும் கொண்டு வந்து வைத்துப் பூஜை போடுகிறான்.

* * *

இந்தக் கதையைக் கேட்ட பிறகு மறுபடியும் ஒரு தரம் அந்தக் கழுகைப் பார்த்தேன். அதனிடம் ஒரு மதிப்பு உண்டாயிற்று.

குழந்தைகளின் கழுத்தில் கழுகின் உருவம் இடம் பெற்றிருப்பதன் காரணம் எனக்கு இப்பொழுதுதான் விளங்கிற்று. கழுகு ராஜனைக் காப்பாற்றிய கழுகு தங்கள் குழந்தைகளையும் காக்கட்டும் என்றே செம்படவர்கள் அந்தக் கழுகுத் தாயத்தைக் கட்டி வைக்கிறார்கள்.

இன்றும் சாதாரணமாகப் பருந்துகளைப் பார்க்கும்போதெல்லாம், அந்த உயர்ந்தெழுந்து நிற்கும் மலைப் பாறைகளும், அதன் மேல் வீற்றிருக்கும் கம்பீரமான மலைக் கழுகும் என்னுடைய நினைவுக்கு வருகின்றன.

## தசரதருக்கு ஆபத்து!






ராம நாடகத்தில் தசரதர் தம் மூன்று மனைவிகளுக்கும் பாயசம் கொடுத்தார்! அதன் பலனாக, அவருக்குக் குழந்தைகளே வேண்டாம் என்று ஆகிவிட்டது!

ரிகார்டுகளில் தெரிகிறது

பாரதி ப்ரிண்டிங் மிஷின்கள்

நீடித்து உழைக்கின்றன !





குறைந்த நிர்வாகச் செலவில் இடைஞ்சலின்றி இலகுவாக வருஷக் கணக்கில் சர்வா உழைக்க பாரதி அச்சு இயந்திரத்திற்கு நிகர் வேறெதுவும் கிடையாது. பாரதி இயந்திரம் ஒவ்வொன்றும் இயந்திர நுணுக்கத்தில் அதி உன்னதமானது. விசேஷ பலமுள்ள வார்ப்பு இரும்பினால் செய்யப்பட்ட புஷ்கள், ராடுகள், ட்ரைவிங் ஷாப்டுகள், முதலியவை, வெகு நேர்த்தியாக உருவாக்கப் பட்டிருக்கின்றன. சுயமாகவே ஒட்டக்கூடிய இணைப்புகள் தேவையானபோது சப்ளை செய்யப்படும்.

டெமி பிளாட், அரை டெமி க்ரௌன், புல்ஸ்கேப் போலியோ ஆகிய சைஸ்களில் கிடைக்கும்.

**BHARATI**

**Printing Machine**




- மணிக்கு 2300 பிரதிகள் அச்சாகும்
- அப்பழுக்கற்ற மை பூச்சு அமைப்பு

**தி இந்தியா மெஷினரி கோ., லிமிடெட்**

29, ஸ்ட்ராண்ட் ரோடு :: கல்கத்தா

மானேஜிங் ஏஜண்டுகள் : தாஸ் பிரதர்ஸ்

போன் : கல்கத்தா - 3385 (3 லைன்கள்) தந்தி: "MARVELLOUS"

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 244. வேறு என்ன செய்யவாம்!

மாபெரும் பக்கன் இவ்வளவும் பேசினான். ஆனால் ராவணனிடத்தில் கண்ட சோர்வு மாறியதாக இல்லை.

பிசாசன் என்பவனுக்குக் கோபம் அபாரமாய் வந்து விட்டது. ஆனால் பேச்சு சுருங்கி விட்டது.

'இனி நாம் எங்கேயாவது போய்த் தொலைய வேண்டியதுதான்' என்று சொக்கு கொள்ளுகிறான்.

'திசாதிசை போதும்நாம்;
அரசன் செய்வினை
உசாவினன் உட்கினன்;
ஒழிதும் வாழ்வென்றான்'
பிசாசன்என் றொருபெயர்
பெற்ற பெய்கழல்
நிசாசரன், உருப்புணர்
நெருப்பின் நீர்மையான்.

[திசாதிசை போதும் நாம்: நாம் இந்த நாட்டை விட்டு நாலா திசையும் ஓட வேண்டியதுதான்; அரசன் செய்வினை உசாவினன் உட்கினன்: ஆளுகிற அரசன்தான், என்ன செய்கிறது என்று கேட்க ஆரம்பித்து விட்டானே! பயந்து விட்டானே; ஒழிதும் வாழ்வு என்றான்: இனி வாழ்வாவது ஒன்றாவது செத்தொழிய வேண்டியதுதான், என்பதாக எரிச்சலோடு பேசுகிறான். பெய்கழல் நிசாசரன்: வீரக் கழலை அணிந்த அரக்கன்: உரு, புணர் நெருப்பின் நீர்மையான்: மனித உருவத்தைக் கொண்ட நெருப்புக்குச் சமானமானவன்—நெருப்பே அரக்க உருவம் எடுத்தது போலிருந்தது அவனைப் பார்த்த போது; நீர்மையான்: தன்மையான்.]

* * *

அடுத்தாற்போல் சூரியசத்ரு என்பவன் தன் எரிச்சலைக் காட்டுகிறான்.

"ராவணன் தன்மை இதுவானால், யோசனைக்கான காரியமும் இதுவானால் நம்மைப் பற்றி என்ன சொல்லிக் கொள்வதோ தெரியவில்லை!"

'ஆரியன் தன்மை
ஈதாயின்; ஆய்வுறு
காரியம் ஈதெனில்;—
கண்ட ஆற்றினுச்
சீரியர் மனிதரே!
சிறியம் யாம்!'எனச்,
சூரியன் பகைஞன்என்(று)
ஒருவன் சொல்லினான்.

[ஆரியன்: ராவணன்; ஆய்வுறு காரியம்: யோசனை செய்கிற காரியம்; கண்ட ஆற்றினால்: ஏதோ கேட்டறிந்த காரியம் அல்ல, கண் கூடாகப் பார்த்த முறையிலேயே; சீரியர் மனிதரே: மனுஷப் பயல்கள்தான் மேலானவர்கள்! வெகு அழகு!]

* * *

யக்ஞ சத்ரு (வேள்விப் பகைவன்) என்பவனுக்கு நடக்கிற காரியத்தை நினைக்கவே முடியவில்லை.

'ஆள்வினை நிலைமையி(து);
அரக்கர் ஆற்றலி(து)!
தாழ்வினை இதனின்மேல்ப்
பகரத் தக்கவோ!
சூழ்வினை மனிசரால்
தோன்றிற் றும்!'என
வேள்வியின் பகைஞனும்
உரைத்து வெங்கினன்.

[ஆள்வினை நிலைமை ஈது: செய்ய வேண்டிய காரியம் இதுவாம், ரொம்ப அழகு! யோசனை செய்வதுதானே செய்ய வேண்டிய காரியம், பலே பலே! அரக்கர் திறமும் கூடிக் கூடிப் பேசுகிறதுதான். வேறு என்ன செய்ய? தாழ்வு இனி இதனின் மேல்ப் பகரத்



"என்ன வக்கீல் ஸார்! தங்களுக்கு ஹைக் கோர்ட் ஜட்ஜு பதவி கொடுக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டார்களே?"

"அது வாஸ்தவந்தான்; ஆனால் நான் இங்கே பஸ்ஸுக்குக் காத்துக் கொண்டிருக்கும்போது வேறு யாருக்கோ கொடுத்து விட்டார்கள்!"

---

தக்கதோ: இதை விடக் கேவலமான காரியம் ஒன்றை நம்மைக் குறித்துச் சொல்லத்தான் முடியுமா: சூழ்வினை மனிதராய்த் தோன்றி நிற்கும்: பூர்வ வினை வந்து நம்மைத் தொலைக்க வேண்டும் என்று எண்ணினும் கேவலம் மனிதரைக் கொண்டா நம்மைத் தொலைக்க வேண்டும். அழகு அழகு!]

∴

கடைசியாக தூம்ராக்ஷஸன் (புகை நிறக் கண்ணன்) முடிவு கட்டி ஒரே வார்த்தையாகப் பேசுகிறான்.

மனுஷர்களோடு, என்று சொல்லுவதில் பயனில்லை; சிவபிரானோடு என்றாலும் போர் செய்வது ஒன்று தான் தக்க காரியம்.

'தோகைநிறைக் குரங்குடை
மனிதர்ச் சொல்லின்என்!
சிகைநிறச் சூலிதன்
திறத்தில்ச் செல்லினும்,
தகையுடைத் தாம் அமர்
சமைதல் தான்'என
புகைநிறக் கண்ணனும்
புகன்று பொங்கினன்.

[தோகை நிறைக் குரங்கு உடை மனிதர்: எண்ணிக்கையில் மிகுந்த குரங்குச் சேனையை உடைய மனிதரை; சிகை: சுவாலை; அக்கினி சொரூபமான சூலாயுதத்தை ஏந்திய சிவபெருமானோடு எதிர்த்துச் செல்லுதல் என்றாலும்; அமர் சமைதல்: போர் செய்தலே தக்க காரியம் ஆகும்; புகன்று பொங்கினான்: சொல்லிக் கோப வேசத்தில் நின்றான்.]

∴

யுத்தம் செய்து செய்து பழகி விட்டால் ஒரு வெறி உண்டாகிவிடும். அந்தத் தமிர் அவர்களை என்ன எல்லாமோ செய்யச் சொல்லும், பேசச் சொல்லும். தலைவனையே நோக்கி முரட்டுத்தனமாகப் பேசச் சொல்லும்.

மேலே சொன்ன வெறி கொண்ட பேச்செல்லாம் சபையில் இருந்த மற்ற வீரர்களையும் கோப வெறிக்கு உள்ளாக்கி விட்டது.

மற்றவன் பின்உறு
மற்றை யோர்களும்,
இற்றிது வேநலம்;
எண்ணல் மற்(று)இல்என்(று),
உற்றன உற்றன
சொல்லி ஓங்கினர்,
புற்றுறை அரவெனப்
புழுங்கும் நெஞ்சினர்.

[மற்றவன் பின் உறு: புகைநிறக் கண்ணன் பேசி முடித்தானோ இல்லையோ, உடனே தான்: இற்றிதுவே நலம்: ஆம்; இதுவே சரியான காரியம்; எண்ணல் மற்று இல் என்று: எண்ணுவதற்கு வேறு ஒரு காரியமும் இல்லை என்று; புற்று உறை அரவெனப் புழுங்கும் நெஞ்சினர்: புற்றில் வாழும் சர்ப்பமே போல் சீறுகிற நெஞ்சினர்; உற்றன உற்றன சொல்லி ஓங்கினர்: வாய்க்கு வந்ததெல்லாம் அப்படி அப்படியே சொல்லி ஒரே கத்தாய்க் கத்தினார்கள்.]

அரசியல் பொறுப்பு என்பதில் கவனத்தைச் செலுத்தாதவர்களான மேலே சொன்ன போர்த் துறையாளர் இப்படியெல்லாம் சொன்னார்கள்.

பொறுப்பை உணர்ந்தவர்கள் எப்படிப் பேசுகிறார்கள் என்பதை அடுத்த இதழில் பார்க்கலாம்.

# சித்த புருஷர்




[ சென்ற வாரத் தொடர்ச்சி ]

குருகுலத்தின் பிரதம ஆசிரியரான என் கணவர், குழந்தைகளுக்குப் புஸ்தகம் மட்டும் வாங்கிக் கொடுக்கவில்லை; அழகான பலூன்களும், பம்பரங்களும், பொம்மைகளும்கூட வாங்கிக் கொடுத்தார்! உடுக்க உடையும், படுக்கப் பாயும் கொடுத்துப் பல ஏழைச் சிறுவர்களைப் பங்களாவிலேயே தங்கியிருக்கவும் செய்தார். ஆசிரியர், குழந்தைகளுக்குப் பாடம் மட்டுந்தானா சொல்லி வைத்தார்? பாட்டும், பஜனையும், பலூன் விளையாட்டும் கூடச் சொல்லி வைத்தார். மகிழமரத்தின் கிளைகளைப் பலூன்களும், பம்பரக் கயிறுகளும், பந்தாடும் கட்டைகளும் அலங்கரித்தன. பங்களாவின் ஒவ்வொரு இடத்தையும் சிறுவர், சிறுமியர் கபடமற்ற தங்கள் 'களுக்' கென்ற சிரிப்பொலியால் நிரப்பி விட்டனர். என் கணவர் காலெல்லாம் அந்தக் குழந்தைகளோடு ஐக்கியமாகி ஆனந்த மடைந்தார். நானும் அவர் ஆனந்தத்தில் பங்கு கொண்டேன்.

காலச் சக்கரம் சுழன்றது. நம்பிக்கை என்னும் தீப ஒளியில் எப்படியோ நான்கு வருஷங்களைக் கடந்து விட்டோம். இந்த நான்கு வருஷங்களில் எங்கள் தாம்பத்ய வாழ்க்கையில் எவ்வித மாறுதலும் இல்லை! அவர் கால் புண் ஆறவோ, அன்றி அதிகரிக்கவோ இல்லை. ஏராளமான பணத்தையும், டாக்டர்களுடைய அவகாசத்தையும் விழுங்கி வெப்பம் விட்டு அசையாமல் நின்றது.

அன்று வேணு அம்மாஞ்சி தம் குடும்பத்தோடு வருவதாகக் கடிதம் எழுதியிருந்தார். என் கணவருக்குச் சந்தோஷம் பிடிபடவில்லை. பல முறை கடிதத்தைப் படித்துப் பார்த்தார். தம்பியும், தம்பியின் குழந்தைகளும் வரப்போகும் செய்தியைப் படித்துக் குழந்தை போலக் குதூகலம் கொண்டார். அன்றுதான் அவர் என்னுடன் மனம் விட்டுப் பேசினார். "பத்மஜா, வேணு இப்போது எதற்காக வருகிறான் தெரியுமா? குழந்தைகளை என்னிடம் விட்டு விட்டுப் போகத்தான்" என்றார். இந்த எண்ணமே அவருக்கு எல்லையற்ற ஆனந்த மளித்தது.

வேணு அம்மாஞ்சியும் வனஜாவும் குழந்தைகளும் வந்து சேர்ந்தார்கள். வீடே அன்று பெரும் குதூகலமாக இருந்தது. என் கணவர் தம் கால் புண்ணைக்கூட லட்சியம் செய்யாமல் ஓடிப்போய்க் குழந்தைகளைக் கையில் எடுத்து அணைத்துக் கொண்டார். "வேணு! இனி வனஜாவும், சம்பத்தும் இங்குதானே இருக்கப் போகிறார்கள்?" என்றார் ஆவலுடன். வேணு அம்மாஞ்சியும் சிரித்துக் கொண்டே தலையசைத்தார்.

அன்று இரவு வெகுநேரம் வரை குதூகலமாக நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம். என் கணவர் கைக்குழந்தையைக் கூடத் தம் மடியை விட்டு நகரவிடவில்லை. வெகு நேரத்திற்குப் பிறகே அவரவர் படுக்கைக்குச் சென்றோம்.

பக்கத்து அறையில் படுத்திருந்த தம்பதிகளின் பேச்சு எனக்கு மிகத் தெளிவாகக் கேட்டது. வேணு அம்மாஞ்சியிடம், வனஜா சொல்லிக் கொண்டிருந்தாள் :—

"குழந்தைகளைப் பெற்று விடுவதோடு மட்டும் நம் கடமை தீர்ந்துவிடுமா? எதிர்காலத்தில் குழந்தைகளின் நல்லதிர்ஷ்டத்திற்குத் தீம்பாக நாமே நிற்பதா? விளையாட்டுப் போலக் காலம் ஓடிவிடும்; வசந்தாவின் கலியாணத்தைப் பற்றி யோசிக்க வேண்டிய நாளும் வந்துவிடும். அப்போது, **தீராத வியாதிக்காரனிடம் வளர்ந்த பெண்** என்று......!" வனஜா வார்த்தைகளை மேலே தொடர முடியாமல் தவித்தாள். "உஷ்; கத்தாதே! அண்ணா விழித்துக் கொண்டிருக்கப் போகிறான்" என்று அடக்கி விட்டார் வேணு அம்மாஞ்சி.

என் அருமைத் தங்கையின் வார்த்தைகள், பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பியை என் உள்ளத்தில் செருகியது போலிருந்தது. குமுறி எழுந்த துக்கத்தைச் சிரமத்துடன் அடக்கிக்கொண்டு, எழுந்து என் கணவரது அறைக்கும், என் அறைக்கும் மத்தியிலுள்ள இடைச்சுவரில் இருந்த ஜன்னல் கதவின் இடுக்குழுலம் அவர் அறையில் பார்வையைச் செலுத்தினேன். அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. என் கணவரது கையிலிருந்து நழுவி விழுந்த புஸ்தகம் அவர் காலடியில் பரிதாபமாகக் கிடந்தது! மேஜை மீது ஊன்றிய கைகளில் தலையைத் தாங்கிக் கவிழ்ந்திருந்தார் அவர்...! வெளியுலகில் இடி இல்லை; மின்னலில்லை. ஆனாலும் அந்தோ

பரிதாபம்! எங்கிருந்தோ வந்த இடியும் மின்னலும் என் அருமை ராஜம் அம்மாஞ்சியின் தலைமீது விழுந்து விட்டது போலும்!

வேணு அம்மாஞ்சி தம் குடும்பத்தோடு கொண்டுவந்த குதூகலத்தைத் திரும்பவும் அழைத்துக் கொண்டு ரயில் ஏறினார். கண்ணீர் சோர நின்ற தம்பிக்குச் சாந்தமாகவே விடைகொடுத்து அனுப்பினார் என் கணவர்.

நாட்கள் சென்றன. முன்னர் குருகுலமாகத் திகழ்ந்த அதே மகிழமரத்தடி, இப்போது குருமார்களின் பீடமாகக் காட்சியளித்தது! சாமியார்களையும், மடாதிபதிகளையும், மத்வாச்சாரியார்களையும் வரவேற்று, உபசரித்து, அவர்கள் உபதேசங்களை மணிக்கணக்கிலும், நாட்கணக்கிலும் கேட்கத் தொடங்கினார் என் கணவர்! 'என்றோ ஒரு நாள் இவரும் காவி உடை அணிந்து கிளம்பிவிடப் போகிறார்!' என்று எண்ணியபோது என் மனம் கலங்கியது. ஆனால், விதியின் விளையாட்டு வேறாக இருந்தது!

எவ்வளவுக் கெவ்வளவு வெளிக்கு அவர் சாந்தமாக இருக்க முயன்றாரோ, அவ்வளவுக் கவ்வளவு அவர் உள்ளக் குமுறல் அதிகரித்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர் உடலும் மெலிந்து, இதுவரை வியாபிக்காதிருந்த அவரது வியாதியும் உடல் முழுதும் வியாபிக்கத் தொடங்கியிராது!

அன்று அவர் தம் கால் புண்ணைக் கழுவிக் கட்டிக் கொள்வதற்கு ஆரம்பித்தவர் அப்படியே சோர்ந்து உட்கார்ந்து விட்டார். அவர் கைகளில்கூடக் கொப்புளங்கள் கிளம்பி விட்டன! 'நான் தொட்டுக் கட்டக்கூடாது' என்ற அவர் உத்தரவையும் மறந்து, அவர் கால் கட்டை அவிழ்த்து, 'டெட்டால்' ஜலம் விட்டுக் கழுவினேன். மருந்துகளைப் போட்டு, காஸை, லிண்ட் இவைகளான துண்டுகளைச் சரியானபடி சேர்த்து வைத்துக் கட்டினேன். பின்பு புதிதாகக் கிளம்பியுள்ள கொப்புளங்களுக்கும் மருந்து போட்டுக் கட்டினேன். அதுவரை அசைவற்று இருந்த அம்மாஞ்சி, கட்டி முடித்தவுடன், அப்படியே என் இரு கைகளையும் பிடித்துக் கொண்டு, "பத்மஜா! இந்தப் பாவியின் மீது நீ ஏன் இத்தனை அன்பைப் பொழிகிறாய்? ஐயோ, பத்மஜா! எனக்காக உன் பொன்னான வாழ்வையே பாழாக்கிக்கொண்டு விட்டாயே? அதை நினைக்கும் போதுதான் என் உள்ளம் துடிக்கிறது. நான் ஏன் வேணுவின் விவாகத்திற்கு வந்தேன்? வாராதிருந்தால் நீ என்னை மணக்க நேர்ந்திராதல்லவா? ஐயோ! எல்லாம் விதி!" என்று சொல்லிக்கொண்டே என் மடிமீது தம் முகத்தைப் புதைத்துக் கொண்டார். என் கண்ணீருடன், அவர் கண்ணீரும் கலந்து விட்டது.

"ஸ்வாமி! நமஸ்காரம்! உள்ளே வரலாமா?" என்ற புதிய குரல் கேட்டு நிமிர்ந்தேன். என் கணவரும் எழுந்து உட்கார்ந்தார். குவித்த கரத்தோடு உள்ளே நுழைந்தார் காவியுடை அணிந்த ஒரு பெரியவர். நான் எழுந்து அவரை வரவேற்று ஆசனம் கொடுத்தேன்.

"ஸ்வாமி! இந்த அணுகுண்டு சகாப்தத்தில்கூட காஷாயதாரிகளை வரவேற்று உபசரிக்கும் வள்ளல் ஒருவர் இருக்கிறார் என்று கேள்விப்பட்டு, போகும் வழியில் அந்த வள்ளலையும் தரிசித்துப் போகலாம் என்று இப்படி நுழைந்தேன்" என்றார்.

கைகுவித்து நமஸ்கரித்த என் கணவரது முகத்தைக் கூர்ந்து நோக்கிய அவர் திடுக்



கிட்டு, "என்ன கட்டு? தங்களுக்கு என்ன உடம்பு?" என்றார் பதறிப்போய்.

என் கணவர் விஷயத்தைச் சுருக்கமாகச் சொன்னார். அவர் விடவில்லை. சிலவற்றைக் கேள்விகள் மூலமும், மற்றவற்றை ஊகத்தின் மூலமும் அறிந்து, ஆச்சரியமடைந்து உட்கார்ந்து விட்டார். நெடுநேரம் வரை அவர் எதுவுமே பேசவில்லை. பிறகு ஒரு பெருமூச்சுடன் சொன்னார் :—

"ஹூம்; அந்தக் காலம் மலையேறி விட்டது, சுவாமி! பொதிய மலைச்சாரலில் வளர்ந்து கிடக்கும் மூலிகைகள் ஒவ்வொன்றும் வியாதியின் விஷ வித்துக்கள்! பாவா வைத்திய குடும்பத்தினரின் சிகிச்சை பிரபலமாகியிருந்த காலத்தில், இம்மாதிரி வியாதிகளின் பெயரைக்கூட மதுரைவாசிகள் கேட்டிருக்க மாட்டார்கள்! சீமை சென்றுவந்த மேதாவிகளை வரவேற்கத் தொடங்கிய மதுரை வாசிகள், பாவா வைத்திய குடும்பத்தினரை அடியோடு மறந்து விட்டனர். பச்சிலைச் சாந்துரைக்கும் 'கலுவ'த்தைக் குல தெய்வமாகக் கொண்ட வைத்திய குடும்பத்தினர் பலர் தங்கள் குலத்தொழில் அடியோடு நசித்துப் போவதைக் காணச் சகியாது சன்னியாசிகளாக மாறிவிட்டார்கள்! ஆயினும், பெருங்காய மிருந்த பாண்டத்தைப் போல், அவர்களில் சிலர் வைத்திய முறையை முற்றிலும் மறந்து, துறந்துவிட முடியாமல் திண்டாடுகிறார்கள்" என்று சொல்லி நிறுத்தினார்.

துள்ளி எழுந்த என் கணவர், அப்பெரியவரின் இரு கைகளையும் பிடித்துக்கொண்டு, "எப்படியாவது என்னை அந்த வைத்திய குடும்பத்தினரிடம் அழைத்துச் செல்லுங்கள். ஒன்று அவர்கள் என் வியாதியையாவது முற்றிலும் குணப்படுத்தட்டும்; இல்லாவிடில் என் உயிரை இவ்வுடலை விட்டுப் பிரிக்கவாவது மருந்து கொடுக்கட்டும்" என்று கெஞ்சினார்.

திடுக்கிட்ட பெரியவர், நீண்டநேர யோசனைக்குப் பிறகு என் கணவரைத் தம்மோடு அழைத்துச் செல்ல சம்மதித்தார். என் மனம் துணுக்குற்றது. அந்த வைத்தியரை இங்கேயே அழைத்து வந்து சிகிச்சை ஆரம்பிக்கும்படி பெரியவரை வெகுவாகக் கெஞ்சினேன்.



லேசாகச் சிரித்த அப்பெரியவர், "அம்மணி! இந்தக் காரியத்தை நான் ஏற்றுக் கொண்டதே தவறோ என்று பயப்படுகிறேன். உன் பொறுமையும், இவரது திடசித்தமும் ஒன்றுபட்டு நிற்பதால் தான் இன்று இந்த வியாதி தன் உக்கிரம் முழுவதையும் காட்ட முடியாமல் அடங்கிக் கிடக்கிறது. 'குணப்படுத்தி விடலாம்' என்ற என் நம்பிக்கைக்கும் இதுவே காரணம். அம்மணி! உன் பொறுமைக்குத் தக்க பரிசு கிடைப்பது நிச்சயம்! இன்னும் முப்பதே நாட்கள் தான்; முப்பத்தோராவது நாள் இவரைப் பத்தினிக் கடவுளான உன்னிடம் ஒப்புவித்து விடுகிறேன். துன்புற்ற வைத்திய குடும்பத்தினர் இங்கு வந்து சிகிச்சை ஆரம்பிப்பது என்பது அசாத்தியம்—கூடாத காரியம்" என்றார்.

மேலும் விவரிப்பானேன். நான் என்ன தடுத்தும் கேளாமல் என் கணவர் ஒரே பிடிவாதமாக அப்பெரியவரோடு கிளம்பி விட்டார். நம்பிக்கையுள்ள வேலைக்காரர்கள் இருவரை அவரோடு அனுப்புவதைத் தவிர வேறு நான் செய்யக்கூடியது ஒன்றுமில்லை.

நாட்கள் சென்றன. அந்தப் பெரியவர் குறிப்பிட்டுச் சென்ற முப்பத்தோராவது நாளும் சென்று, மேலும் சில தினங்

# சொன்னபடியே!



"டாக்டர் ஸார்! நீங்கள் சொன்னபடி செய்து விட்டீர்கள். ஒரு மாதத்துக்குள் என்னை நடக்கும்படி செய்து விட்டீர்கள்."

"சந்தோஷம்! இப்போது நன்றாக நடக்க முடிகிறது அல்லவா?"

"முடிகிறதோ, இல்லையோ! இனிமேல் நடந்து தான் தீரவேண்டும். உங்கள் பில்லுக்குப் பணம் கொடுப்பதற்காக என் காரை விற்றுவிட்டேன்!"

---

கள் சென்று விட்டன. ஆனால், என் கணவர் வரவில்லை! என் மனம் எண்ணாதது எண்ணிப் புண்ணாகியது. ஒவ்வொரு நாளையும் ஒவ்வொரு யுகமாகப் போக்கினேன். "என்ன அறிவுகெட்டதனம்? முகமறியாத ஒரு சாமியாருடன் அவரை அனுப்பிவிட்டுப் பெரியவர்களுக்கும் தகவல் கொடுக்காமல் இப்படியே இன்னும் எத்தனை நாட்களைக் கழிப்பது? 'மலையாள பகவதி! காபலி......' என்றெல்லாம் சொல்லுவார்களே, அம்மாதிரி ஏதாவது நடந்துவிட்டால்? ஐயோ! பகவானே!......" இம்மாதிரியான எண்ணங்களால் என் மனம் குழம்பித் தவித்தது.

மாமாவுக்குத் தந்தி கொடுத்து வரவழைத்தேன். விஷயத்தை அறிந்த மாமா பதறித் துடித்தார். உடனே நாலா திசைகளுக்கும் தகவல் கொடுத்து, பாவா வைத்திய குடும்பம் பற்றிய தகவலை அறிந்துவர ஏற்பாடு செய்தார். போலீஸ் முதல் புல்லுக்கட்டுக்காரிவரை தகவல் கொடுத்துத் தீவிரமாகத் தேட ஏற்பாடு செய்தார். என்ன செய்து என்ன? என் கணவர் சென்ற திசையின் அடிச்சுவட்டைக்கூடக் கண்டுபிடிக்க முடியவில்லை! விளையாட்டுப்போல் மூன்று மாதங்கள் ஓடி மறைந்தன.

அன்று, 'மாமாவுக்கு உடம்பு அதிகம்!' என்று தந்தி வந்ததால் மாமா புறப்பட வேண்டியதாயிற்று. அவரை அனுப்பிவிட்டு மகிழமரத்தடியில் பிரமை பிடித்தவள்போல் நின்றேன். எனக்கு நேரம் போனதே தெரியவில்லை. அந்தி மங்கும் நேரத்தில் குதித்துப் பறந்து விளையாடிய பட்சி ஜாலங்கள், தங்கள் இனிய குரலில் கீச்சிட்டதானது என்னைப் பரிகசிப்பதுபோல் இருந்தது!

திடீரென்று ஒரு நாள் என் இடது கண்ணும் இடது தோளும் துடித்தன! தூரத்தே வந்த வண்டியில் பூட்டிய மாடுகளின் கழுத்து மணிகளின், 'கல் கல்' என்ற சப்தம் என் துடிப்பிற்குத் தாளமிட்டது! 'ஆம்! கதைகளிலும், காவியங்களிலும்கூட நிகழாத சம்பவம் அன்று என் வாழ்விலே நிகழ்ந்தது! 'கல் கல்' என்ற சப்தத்துடன் வந்த அந்த வில்வண்டி, 'கேட்'டைத் தாண்டி உள்ளே நுழைந்தது! "ஆ! அம்மா! மருமகப் பிள்ளை வந்துடுச்சு!" என்று துள்ளிக் குதித்தான் காவல்கார முனியன். என் உடல் ஒரு முறை குலுங்கி ஓய்ந்தது. வண்டியினின்றும் இறங்கி வந்தவர் 'என் கணவர்தான்!' என்பதை நிதானிக்கச் சிறிது நேரம் பிடித்தது. கருத்தும் இளைத்தும் உருமாறி நின்ற அவர் என் அருமை நாதனும் அம்மாஞ்சியேதான்! என் பிரமை தெளிந்ததும் அவரைக் கால் முதல் தலைவரை உற்று நோக்கினேன். என்னைப் பார்த்தவண்ணம் அசையாது சிலையாக நின்றிருந்த அம்மாஞ்சி, பிறகு சிரித்தபடி சொன்னார்:—

"பத்மஜா! இனி அந்தப் புண்களை நீ என்றுமே காணமுடியாது! அன்று அவர் உனக்கு அளித்த வாக்கை நிறைவேற்றி விட்டார், பத்மஜா! அன்று இங்கு வந்த அந்தப் பெரியவரே, பாவா வைத்திய குடும்பத்து மேதாவிதான்! அவர் உனக்குச் சொன்னபடி, ஒரு மாத காலத்தில் வியாதியைக் குணப்படுத்தி என்னை அனுப்பிவிடப் பெரிதும் பாடுபட்டார். ஆயினும் அது சாத்தியப்படவில்லை. எக்காரணத்தாலோ, சிகிச்சையை முடிக்குமுன் உனக்குத் தகவல் கொடுக்கவும் அவர் மறந்து விட்டார். இருண்ட என் வாழ்வில் ஒளி உண்டாக்கப் படாத பாடுபட்ட அவர் மனதைப் புண்படுத்த நானும் விரும்பவில்லை" என்று நிறுத்தினார்.

வியப்பினாலும், திகைப்பினாலும் எனக்குப் பேச்சே எழும்பவில்லை. மீண்டும் அவராகவே தொடர்ந்தார் :—

"காடெல்லாம் அலைந்து தேடிப் பல பச்சிலைகளைக் கொண்டு வருவார்; அவைகளைக் கலுவத்திலிட்டுக் கலவை செய்வார். எத்தனை விதமான தைலங்கள் வடித்தார்! எத்தனை விதமான மெழுகுகள் செய்தார்! எத்தனை விதமான பஸ்மங்கள் செய்தார்! பத்மஜா! அந்த மேதாவியின் வைத்திய முறையை ஒருநாளில் விவரித்து விடுவது இயலாத காரியம். எனக்கு அவர் பயிற்றுவித்த ஆசனங்களும் சாமான்யமானதல்ல. உள்ளுக்கும் வெளிக்குமாக ஒரே சமயத்தில் அவர் சிகிச்சை தொடங்கியதும், அதன் உக்ரத்தைத் தாங்க முடியாது தவித்த நான் ஒருநாள் அவர் கன்னத்தில் அறைந்தும் விட்டேன். அவருக்குத் தான் என்ன பொறுமை! எத்தகைய சகிப்புத்தன்மை! நாளெல்லாம் என் வியாதிக்காகத் தம் சரீரத்தைச் சாறாகப் பிழிந்தார். அவர் பட்ட பாட்டைக் கண்டு நடுங்கி, ஒடுங்கி என் வியாதியும் அடியோடு மறைந்து விட்டது! பத்மஜா! நிச்சயதார்த்தத்தன்று நீ திடமான குரலில் சொன்னபடி, தீராத வியாதியும் தீர்ந்தது! இனி அதன் சுவடுகூடத் தென்படாமல் செய்துவிட்ட அவர் ஒரு மனித தெய்வம்!" என்று முடித்தார்.

சிறிது நேரம்வரை என்னால் பேசவே முடியவில்லை. பிறகு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு, "இந்த மட்டும் என் ராஜும் அம்மாஞ்சியை உயிரோடு அனுப்பிய அந்த மனித தெய்வம் என்றும் நம் குல தெய்வமாகவே இருக்கட்டும். ஒருவேளை அந்த சித்தபுருஷர், உங்கள் சித்தத்தையும் கவர்ந்து உங்களையும் சித்த புருஷர் ஆக்கி விட்டாரோ என்று பயந்துவிட்டேன்" என்று சொன்னேன். அப்பொழுது என் குரல் கம்மி விட்டது; கண்களில் நீர் திரையிட்டது.

அம்மாஞ்சி தம் விழிகளால் என்னை விழுங்கி விடுபவர்போல என் முகத்தைக் கூர்ந்து பார்த்தார். அவரது அகன்ற விழிகளிலும் நீர் திரையிட்டது. மிகக் கனிந்த குரலில், "பத்மஜா! என் சித்தத்தைக் காந்தம்போல் கவர்ந்து இழுக்கும் சக்தியொன்று இந்த மகிழ மரத் தடியிலே நிற்கும்போது, வேறு எந்தச் சக்தியால்தான் என் சித்தத்தைக் கவர முடியும்?" என்றார். அவரது விழிகளில் ஆர்வம் மிதந்து நின்றது; ஆவல் பொங்கிப் பிரகாசித்தது.

'சில்'லென்று வீசிய தென்றலில் சலசலத்த மகிழமரம், தன் அழகிய மகிழ மலர்களை எங்கள்மேல் பொல பொலவென்று பொழிந்தது. நீண்ட நாட்கள் தவமிருந்து பெற்ற என் மகிழ்ச்சியில் தானும் பங்கு கொண்டு, பெரிதும் மகிழ்ந்தது மகிழமரம்!

---

## யார் செல்லம்?








# சுதந்திர மாளிகை

ஜெயமணி



## 6. ஜனங்களின் ஜீவாதார உரிமைகள்

இந்த அரசியல் திட்டம் அமுலுக்கு வருமுன் இந்தியாவில் அனுஷ்டிக்கப் பட்டு வரும் சட்டங்கள் கீழே குறிப்பிட்டுள்ள ஜீவாதார உரிமைகளுக்கு முரணாக இருக்குமாயின், அத்தகைய சட்டம் எதுவும் பிறகு செல்லுபடியாகாது.

கீழே கண்ட உரிமைகளுக்குக் குந்தகமாகவோ அல்லது அந்த உரிமைகளைக் குறைக்கக்கூடிய விதத்திலோ சட்டம் எதுவும் செய்ய சர்க்காருக்கு அதிகாரமில்லை. சர்க்கார் அத்தகைய சட்டத்தை நிறைவேற்றினாலும்கூட அது செல்லாது.

எனினும் சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வு, வேற்றுமை, பாரபட்சம்போன்ற விபரீதங்களை ஒழிப்பதற்கான எத்தகைய சட்டத்தையும் அமுலுக்குக் கொண்டுவர சர்க்காருக்குப் பூரண அதிகாரம் உண்டு.

* * *

இந்தியப் பிரஜைகள் விஷயத்தில் மதம், ஜாதி, ஆண், பெண், பிறப்பிடம் முதலியன காரணமாக மாத்திரம் சர்க்கார் எவ்வித வேற்றுமையும் காட்டக் கூடாது.

கடைகள், பொதுஜன போஜன விடுதிகள், ஹோட்டல்கள், பொதுஜனங்களுக்கான பொழுது போக்கு மிடங்கள் முதலியவைகளில் செல்ல மதம் காரணமாக யாருக்கும் எவ்விதத்திலும் உரிமையின்மையோ, தடையோ, கட்டுப்பாடோ, நிபந்தனையோ, கஷ்ட நஷ்டமோ இருக்கக் கூடாது.

ஓரளவோ அல்லது முற்றிலுமோ சர்க்கார் பணத்தைக் கொண்டு பராமரிக்கப் பட்டு வரும் அல்லது பொதுஜன உபயோகத்துக்காக விடப்பட்டுள்ள கிணறுகள், குளங்கள், ஸ்நான கட்டங்கள், ரஸ்தாக்கள், பொது இடங்கள் முதலியவற்றை உபயோகிக்கும் விஷயத்தில் மதம் காரணமாக மாத்திரம் யாருக்கும் எவ்விதத் தடையும் இருக்கக் கூடாது. எனினும் அவற்றை உபயோகிக்கும் விஷயமாக பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் பிரத்தியேக விதிகளை அமுலுக்குக் கொண்டு வர சர்க்காருக்கு அதிகாரம் உண்டு.

நீண்டாமை அடியோடு ஒழிக்கப்பட்டிருக்கிறது. நீண்டாமையை அடிப்படையாகக் கொண்ட எந்தக் காரியமும் சட்டப்படி தண்டிக்கக் கூடிய குற்றமாகும்.

சர்க்கார் உத்தியோக சம்பந்தமாக சகலருக்கும் எவ்வித வேற்றுமையுமின்றி சம சந்தர்ப்பம் அளிக்கப்படும். அவ்விஷயமாக மதம், ஜாதி, ஆண், பெண், பரம்பரை, பிறப்பிடம், வசிக்குமிடம் போன்ற காரணங்களால் மாத்திரம் எவ்வித வேற்றுமையும் அனுஷ்டிக்கப்பட மாட்டாது.

எனினும் குறிப்பிட்ட பிற்போக்கான வகுப்பினருக்கு சர்க்கார் உத்தியோகங்களில் போதிய பிரதிநிதித்துவம் இல்லையென்று சர்க்கார் கருதினால், அத்தகைய வகுப்பினருக்கு உத்தியோகங்களை ஒதுக்கி வைக்க சர்க்காருக்குள்ள அதிகாரத்தை மேலே குறிப்பிட்ட ஷரத்து தடுக்க முடியாது.

அதுபோலவே, குறிப்பிட்ட மத அல்லது வகுப்பு ஸ்தாபன சம்பந்தமான

### திருத்தம்

26-12-48-தேதி கல்கி இதழில் 61-ம் பக்கத்தில் பிரசுரமாகியிருக்கும் ஐ.ஆர்.சி.(ரேடியோ) லிமிடெட் கம்பெனியாரின் விலாஸத்தை "35,சித்தரஞ்சன் அவின்யூ" என்று திருத்திப் படிக்கவும்.

விஷயங்களுக்கு, குறிப்பிட்ட மதத்தை அல்லது வகுப்பைச் சேர்ந்தவரை உத்தியோகஸ்தர்களாகவோ, நிர்வாகிகளாகவோ நியமிக்கவும் சர்க்காருக்குள்ள அதிகாரத்தை அந்த ஷரத்து பாதிக்காது.

சர்க்கார் யாருக்கும் எவ்வித பட்டமும் அளிக்கமாட்டார்கள். இந்தியப் பிரஜை எவருக்கும் அன்னிய சர்க்கார்களிடமிருந்து எவ்வித பட்டமும் பெற உரிமையில்லை. எனினும் இந்தியப் பிரஜை எவரும் அன்னிய சர்க்கார்களிடமிருந்து இராணுவப் பட்டங்களோ, கலாசாலைப் பட்டங்களோ பெறுவதற்குத் தடை எதுவுமில்லை.

சர்க்காரின் கீழ் பதவி வகிக்கும் எவரும் இந்தியக் குடியரசுத் தலைவரின் சம்மதமின்றி வெளிநாட்டு சர்க்கார்களிடமிருந்து வெகுமதி, பணம், உத்தியோகம் எதையும் ஒப்புக் கொள்ளக் கூடாது.

இந்தியப் பிரஜைகள் சகலருக்கும் பேச்சு சுதந்திரமும் எழுத்து சுதந்திரமும் உண்டு. அவர்கள் அமைதியாக, ஆயுதமின்றி கூட்டங்கள் கூடலாம். சங்கங்களை ஸ்தாபிக்கலாம். இந்தியாவைச் சேர்ந்த சகல இடங்களுக்கும் யாதொரு தடையுமின்றிச் செல்லலாம். இந்தியாவைச் சேர்ந்த எந்தப் பிரதேசத்திலும் வசிக்கலாம், ஸ்தாபிக்கலாம். மற்றும் எந்த இடத்திலும் சொத்துக்களை வாங்கவும், வைத்துக் கொள்ளவும், விற்கவும், இஷ்டப்படி எந்தத் தொழிலிலும் ஈடுபடவும் சகல இந்தியப் பிரஜைகளுக்கும் உரிமை உண்டு.

எனினும் சர்க்காரின் அதிகாரத்தையோ அல்லது அஸ்திவாரத்தையோ, பொது ஜனங்களின் க்ஷேமத்தையோ சிதைக்கக்கூடிய காரியங்களைத் தடுப்பதற்கான தற்போதைய சட்டங்களை அந்த ஷரத்து பாதிக்காது. அவதூறு, ஆபாசம், ஒழுங்கின்மை, மான ஹானி முதலியவற்றைத் தடுக்க புதிதாகச் சட்டங்கள் செய்ய சர்க்காருக்கு உரிமை உண்டு. சில சந்தர்ப்பங்களில் மேலே குறிப்பிட்ட சுதந்திர உரிமைகளைக் கட்டுப்படுத்த தற்போதுள்ள சட்டங்களையோ அல்லது அவ்வாறு தடுக்கப் புதிதாக சட்டங்கள் செய்ய சர்க்காருக்குள்ள அதிகாரத்தையோ மேற்படி ஷரத்து பாதிக்காது.

நியாயமான கட்டுப்பாடுகளை விதிக்க மாகாணங்களுக்கு உள்ள அதிகாரத்துக்கு உட்பட்டும் பார்லிமெண்டு விதிக்கும் சட்டங்களுக்கு உட்பட்டும், இந்தியா முழுதும் தங்கு தடையின்றி வர்த்தகப் போக்கு வரவு, வியாபார சுதந்திரம் உண்டு.

அடிமை வேலை செய்ய மனிதரை விற்பது வாங்குவது, நிர்ப்பந்தப்படுத்தி வேலை வாங்குவது போன்ற காரியங்கள் தடுக்கப்பட்டிருக்கின்றன. மீறி அவற்றைச் செய்வோர் சட்டப்படி தண்டிக்கப்படுவார்கள். எனினும் பொதுக்காரியங்களுக்காக மாத்திரம் நிர்ப்பந்த வேலை வாங்க சர்க்காருக்கு அதிகாரம் உண்டு. அவ்விதம் நிர்ப்பந்த வேலை வாங்கும் விஷயமாய் மதம், ஜாதி, வகுப்பு காரணமாக சர்க்கார் பாரபட்சம் எதுவும் காட்டக் கூடாது.

பதினாலு வயதுக்குக் குறைந்த எந்தச் சிறுவர் சிறுமியரையும் தொழிற்சாலையிலோ, சுரங்கத்திலோ அல்லது விபத்து நேரக் கூடிய வேறெந்த வேலையிலோ எவரும் வைத்துக் கொள்ளக் கூடாது.

பொது ஒழுங்கு, ஒழுக்கம், ஆரோக்கியம் முதலியவற்றிற்கு முரணின்றி சகலருக்கும் தங்களுடைய மனச்சாட்சிப்படி நடக்க உரிமையுண்டு.

குறிப்பிட்ட மதத்தை அனுசரிக்கவும் அனுஷ்டிக்கவும் பிரசாரம் செய்யவும் எல்லோருக்கும் சுதந்திரம் உண்டு. சீக்கியர்கள் 'கிர்பான்' (கத்தி) வைத்துக் கொள்வது சீக்கிய மதத்தின் ஓர் அம்சமாகக் கருதப்படும்.

எனினும் மத அனுஷ்டானத்தை யொட்டிய பொருளாதார, பண சம்பந்தமான, அரசியல் அல்லது இதர அலுவல்களை ஒழுங்கு செய்யவும், கட்டுப்படுத்தவும், சர்க்காருக்கு அதிகாரம் உண்டு. பொது ஜனங்களுக்குச் சொந்தமான ஹிந்து மத ஸ்தாபனங்களை ஹிந்துக்களான சகல வகுப்பினருக்கும் பிரிவின

---

## சென்னை அதிசயம்!





முதல் விருந்தாளி :—போயும் போயும் இவ்வளவு மட்டமான கச்சேரியை ஏற்பாடு பண்ணியிருக்கேளே! சகிக்கவில்லையே!

செட்டியார் :—கச்சேரி சுகமில்லை என்று தெரிஞ்சுதானே வெளியிலே வந்து நிக்கறேன்!

இரண்டாவது விருந்தாளி :—அடாடா! எவ்வளவு பிரமாதமான கச்சேரி! அபாரமாய்ப் பாடுகிறாரே!

செட்டியார் :—நல்ல கச்சேரி என்று தெரிஞ்சுதானே ஆயிரம் ரூபாய் கொடுத்து ஏற்பாடு செய்தேன்!

---

ருக்கும் இறந்து விடவும் சர்க்காருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

எவரும் குறிப்பிட்ட குற்றம் செய்த போது அமுலில் இராத ஒரு சட்டத்தின்படி, பிறகு அதாவது சட்டம் அமுலுக்கு வந்தபின் தண்டனை விதிக்கப்படமாட்டார்கள். குற்றம் செய்தபோது அமுலில் இருந்த சட்டத்தில் குறிப்பிட்டிருப்பதற்கு அதிகமாக எந்தக் குற்றவாளிக்கும் தண்டனை விதிக்கப்பட மாட்டாது.

பொது ஒழுங்கு, ஒழுக்கம், ஆரோக்கியம் இவற்றிற்கு முரணின்றி ஒவ்வொரு மதத்தினருக்கும் மத அல்லது தர்ம காரியங்களுக்காக ஸ்தாபனங்களை ஏற்படுத்தவும், பராமரிக்கவும், நிர்வகிக்கவும் உரிமை உண்டு; அதுபோலவே அவர்களுக்கு ஸ்தாவர ஜங்கம சொத்துக்களை வாங்கவும், சட்டத்துக்கு உட்பட்டு அத்தகைய சொத்துக்களை நிர்வகிக்கவும் உரிமை உண்டு.

குறிப்பிட்ட வரிகளின் மூலம் கிடைக்கும் தொகையை மதத்தின் வளர்ச்சிக்காகவோ அல்லது பராமரிப்புக்காகவோ செலவழிப்பதாயின், அத்தகைய வரிகளைக் கொடுக்கும்படி யாரையும் கட்டாயப்படுத்தக் கூடாது.

முற்றிலும் சர்க்கார் நிதியிலிருந்து பராமரிக்கப்படும் எந்தக் கல்வி ஸ்தாபனத்திலும் எந்த மத போதனையும் பாடமும் அளிக்கக் கூடாது. ஆனால், மத போதனை இருக்க வேண்டும் என்ற நிபந்தனையின் மீது 'என்டோமென்ட்' அல்லது 'டிரஸ்டி'ன் கீழ் சர்க்காரால் நிர்வகிக்கப்படும் கல்வி ஸ்தாபனங்கள் விஷயத்தில் மேற்படி ஷரத்து செல்லாது.

சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்ட அல்லது சர்க்காரின் பண உதவி பெற்ற கல்வி ஸ்தாபனங்களில் மத போதனை இருக்குமாயின்,—அல்லது அங்கு ஏதாவது மத சம்பந்தமான பூஜை நடக்குமாயின் அவற்றில் கலந்து கொள்ளும்படி அந்தக் கல்வி ஸ்தாபனத்திலுள்ள எவரையும், அவருடைய, அல்லது அவர் 'மைனராக' இருப்பின் அவரது 'கார்டியனின்' சம்மதமின்றி வற்புறுத்தக் கூடாது.

இந்தியப் பிரஜைகளுக்கு அவரவருடைய சொந்த பாஷையையும், லிபியையும், பண்பாட்டையும் பாதுகாத்துக் கொள்ள உரிமை உண்டு.

சர்க்காரால் பராமரிக்கப்படும் அல்லது சர்க்காரிடமிருந்து பண உதவி பெற்றுப் பரிபாலிக்கப்படும் கல்வி ஸ்தாபனத்தில் சேர மதம், ஜாதி, பாஷை போன்ற காரணங்களால் மாத்திரம் எவருக்கும் யாதொரு தடையும் இருக்கக் கூடாது.

மதம் அல்லது வகுப்பு அல்லது பாஷையை அடிப்படையாகக் கொண்ட சகல சிறுபான்மையோருக்கும் தங்கள் இஷ்டப்படி கல்வி ஸ்தாபனங்களை ஸ்தாபிக்கவும் நிர்வாகம் செய்யவும் உரிமை உண்டு. உதாரணமாகப் பம்பாயில் தமிழர்கள் ஸ்தாபித்திருக்கலாம். தமிழர்கள் சிறுபான்மையோர் அல்லவாயினும், பாஷை சம்பந்தப்பட்ட வரையில் அவர்கள் பம்பாயில் சிறுபான்மையோராகவே இருப்பார்கள். எனவே அங்கு அவர்களுக்குத் தங்கள் இஷ்டப்படி தமிழ்ப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்திக் கொள்ள உரிமை உண்டு. அதுபோலவே

இந்தியாவிலுள்ள சகலருக்கும் அத்தகைய உரிமை உண்டு.

கல்வி ஸ்தாபனங்களுக்கு உதவி அளிக்கும் விஷயத்தில், மதம், வகுப்பு அல்லது பாஷையை அடிப்படையாகக் கொண்ட ஒரு சிறுபான்மையோரின் நிர்வாகத்தில் இருக்கிறது என்ற காரணத்துக்காக எந்தக் கல்வி ஸ்தாபனத்தினிடமும் சர்க்கார் பாரபட்சம் காட்டக் கூடாது.

ஜீவாதார உரிமைகளை அமுலுக்குக் கொண்டு வரும்படி சுப்ரீம் கோர்ட்டு மூலம் சர்க்காரை வற்புறுத்தச் சகலருக்கும் உரிமை உண்டு. இந்த உரிமைதான் இந்திய அரசியல் திட்டத்தின் உயிர் நாடியாகும்.

ஜீவாதார உரிமைகளை மறுக்காமல் அமுலுக்குக் கொண்டு வரும்படி சர்க்காருக்குக் கட்டளையிட சுப்ரீம் கோர்ட்டுக்கு அதிகாரம் உண்டு. இந்தியாவிலுள்ள எந்தக் கோர்ட்டாயினும் அந்தக் கோர்ட்டின் நிர்வாகத்திலுள்ள பிரதேச எல்லைக்கு உட்பட்டு, அதற்கு சுப்ரீம் கோர்ட்டின் அதிகாரங்களை அளித்துச் சட்டம் செய்ய பார்லிமெண்டுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

இந்த அரசியல் திட்டத்தில் உத்தரவாதம் அளிக்கப்பட்டுள்ள ஜீவாதார உரிமைகளை இராணுவத்தினருக்கு அல்லது பொதுஜன அமைதியைப் பாதுகாக்கும் படையினருக்கு, அவர்களுடைய கடமைகளுக்கு முரணின்றியும் அவர்களிடையே ஒழுங்கை நிலைநிறுத்தவும் எவ்வளவு தூரம் கட்டுப்படுத்த வேண்டும் அல்லது ரத்து செய்ய வேண்டும் என்பதைச் சட்டத்தின் மூலம் பார்லிமெண்டு நிர்ணயிக்கலாம்.

ஜீவாதார உரிமைகளுக்கு விரோதமாகச் செய்யப்படும் குற்றங்களுக்குத் தண்டனையை நிர்ணயிக்கும் அதிகாரம் இந்தியா பார்லிமெண்டுக்குத்தான் உண்டு; மாகாண சட்டசபைகளுக்கு இல்லை.

அட்டர்னி ஜெனரல்: சுப்ரீம் கோர்ட் நீதிபதி பதவியை வகிப்பதற்குற்ற யோக்கியதாம்சங்கள் உள்ள ஒருவரை அட்டர்னி ஜெனரலாக இந்தியக் குடியரசுத் தலைவர் (பிரஸிடெண்டு) நியமிப்பார். சட்ட சம்பந்தமான விஷயங்களையொட்டி இந்திய சர்க்காருக்கு ஆலோசனை கூறுவதே அட்டர்னி ஜெனரலின் அலுவலாகும். பிரஸிடெண்டு குறிப்பிடும் சட்ட சம்பந்தமான சகல அலுவல்களையும் அட்டர்னி ஜெனரல் கவனிக்க வேண்டும். இந்தியாவிலுள்ள எந்தக் கோர்ட்டிலும் ஆஜராகி வாதிக்க அவருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

அவரை நியமிப்பதும் விலக்குவதும் அவருடைய சம்பளத்தை நிர்ணயிப்பதும் பிரஸிடெண்டின் அதிகாரத்துக்கு உட்பட்ட விஷயங்களே.

[இந்தியா அரசியல் திட்ட நகலிலுள்ள 315 ஷரத்துகளில் இதுவரை 66 ஷரத்துகள் அரசியல் நிர்ணய சபையில் நிறைவேறியிருக்கின்றன. மேற்படி சபை மீண்டும் அடுத்த மே மாதம் 16-ந் தேதி கூடும்போது மற்ற ஷரத்துகளைப் பற்றிய விவாதம் ஆரம்பமாகும்.]

● ★ ●

## தமிழ் இசைப் பாடலுக்குப் பரிசு



சென்னைத் தமிழ் மாணவர் மன்றத்தின் ஆதரவில் தேவாரம், திருவாசகம், திவ்ய ப்ரபந்தம், தாயுமானவர், இராமலிங்க சுவாமிகள் ஆகிய பாடல்களை ராக, தாள, பாவத்துடன் பாடுவதற்குப் பச்சையப்பன் கலாசாலையில் ஒரு பரிசுப் போட்டி நடைபெற்றது. பிரசிடென்சி காலேஜ், பச்சையப்பன் காலேஜ், லயோலா காலேஜ், கிறிஸ்டியன் காலேஜ், விவேகானந்தா காலேஜ், குவீன் மேரீஸ் காலேஜ், எத்திராஜ் காலேஜ் ஆகிய கலாசாலைகளைச் சேர்ந்தவர்கள் பலர் போட்டியிட்டனர்.

குவீன் மேரீஸ் கலாசாலை மாணவி ஸ்ரீமதி மணிகுமாரி முதற் பரிசு பெற்றார்.

நோய்க்குப் பிறகு வெகு
விரைவில் உடம்பு தேறவும்
பலஹீனத்தைப் போக்கவும்

# லெஸிவின்

போஷணைக்குப் பெயர்பெற்ற
சிறந்த டானிக்




உடலையும் நரம்புகளையும்
வலுப்படுத்தும்

●

லெஸிதின், வைடமின்கள்
கொய்னு சத்துக்கள்
அடங்கியது

●

எல்லா உயர்ந்த கெமிஸ்டுக
ளிடமும் கிடைக்கும்.

●

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா :: பம்பாய்

ஏஜண்டுகள் :

என். தேசாய் கேளண்டர் & கோ.,
14, பந்தர் தெரு :: மதராஸ்

# ஆகாரத்திற்கு பின் வயிற்று நோயா?

இதுதான் நான்
சிபாரிசு செய்வது



வயிற்றில் அதிக அமிலம் சேருவதால் அடிக்கடி அஜீரண உபாதைகள் ஏற்படலாம். இந்த அதிக அமில சேர்ப்பினால் ஏற்படும் எச்சில், வாயு, இதர உபாதைகள், அஜீரணம் ஆகாரத்திற்குப் பின் வயிற்று நோய் முதலியவைகளுக்கு உபாயம் அந்த நிவாரணியாகிய "பிஸ்மாக்"கை சிபாரிசு செய்கிறேன். அமில சேர்க்கையால் வயிற்று நோயால் தவிப்பவர்களுக்கு உடனேயே "பிஸ்மாக்" நிவாரண மளிக்கும். இன்றே ஒரு முறை பரீக்ஷித்து உங்கள் வயிற்றை சகல உபாதைகளிலிருந்தும் [illegible] கொள்ளுங்கள்.

உங்களுக்கு வேண்டியது

எல்லா கெமிஸ்டுக ளிடமும் ஸ்டோர் களிலும் பவுடராக வும் மாத்திரையாக வும் கிடைக்கும்.

**BISMAG**

இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள் :

ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்.

பம்பாய் - கல்கத்தா - டெல்லி - மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392

# உங்கள் சருமம் ஒவ்வொரு தினமும் அதிக அழகைப் பெறுகிறது





## ரெக்ஸோனாவிலிருக்கும் கேடில்தான் உங்கள் சருமத்திற்கு புது ஆரோக்கியமும் புது அழகும் தருகிறது

தினமும் குறைந்தபக்ஷம் இரண்டு தடவையாவது ரெக்ஸோனா சோப் உபயோகியுங்கள். கேடில் அடங்கியுள்ள அதன் நுரையை மெதுவாக சருமத்தில் தடவி பிறகு கழுவுங்கள். ரெக்ஸோனாவிலுள்ள கேடில் உங்கள் சருமத்தை சுத்தமாகவும் மழமழப்பாகவும் புத்துணர்ச்சியுடையதாகவும் செய்யும். மேலும் புதிய ஆரோக்கியத்தையும் புதிய சௌந்தரியத்தையும் அளிக்கும். கேடில் உங்கள் சருமத்தின் சுத்தத்தையும் மலர்ச்சியையும் மேம்படுத்துவதோடல்லாமல், சூட்டிலும், குளிரிலும், காற்றிலும், புழுதியிலும் சருமத்தை மாசற்றதாகவும் சௌந்தரியமுடையதாகவும் இருக்கச்செய்கிறது.




# ரெக்ஸோனா

கேடில் கலந்த சோப் இது ஒன்றே!

RP. 46-172 TM